# சௌந்தர கோகிலம்

இரண்டாம் பாகம்

*நூலாசிரியர்*

வடுவூர் K. துரைசாமி ஐயங்கார், B.A.,



ஜெனரல் பப்ளிஷர்ஸ்

244, (ப. எண்.) ராமகிருஷ்ணா மடம் சாலை,

மயிலாப்பூர், சென்னை – 600 004.

# சௌந்தர கோகிலம்

*7–வது அதிகாரம் தொடர்ச்சி*

## விதைக் கோட்டைக்குள் எலி

கட்டிலின்மீது விடப்பட்ட கற்பகவல்லியம்மாள் தெளிவடைந்து தனது இயற்கை நிலைமைக்கு வர, அன்றைய தினம் மாலைவரையில் பிடித்தது; பூஞ்சோலையம்மாள், கோகிலாம்பாள், புஷ்பாவதி ஆகிய மூவர் மாத்திரமே மாறி மாறி அவ்விடத்திலிருந்து, அந்த அம்மாளுக்குரிய உபசரணைகள் புரிந்து வந்தனர். பாச்சாமியான் என்னும் முரட்டுத் துருக்கனால் பெருத்த அவமானம் ஏற்பட்ட பிறகு பூஞ்சோலையம்மாள், தனது வேலைக்காரிகளும் அந்தச் சம்பவத்தை அறிந்திருப்பார்களோ என்ற நினைவினாலும், அச்சத்தினாலும் அவர்களை அந்த அந்தப்புரத்திற்கு அழைக்காமல், தானே மற்ற இருவரோடு அங்கே இருந்து கற்பகவல்லியம்மாளது மூர்ச்சையைத் தெளிவித்தனள். நிச்சயதார்த்தத்திற்காக வந்திருந்த பெண்பாலார் அனைவரும் கோகிலாம்பாள் இருந்த இடத்தைவிட்டு வேறொரு மண்டபத்திற்குப் போய் அங்கே இருந்தனரென்று முன்னரே சொன்னோம் அல்லவா? அவர்களும் சிறிது நேரத்திற்குப் பிறகு உண்டான பெருத்த கலகத்தையும் ஆரவாரத்தையும் உணர்ந்து, ஜன்னல்களின் வாயிலாகவும், வெளியில் சென்றும், பாச்சாமியான் சொன்ன சொற்களைக் கேட்டு, மிகுந்த ஆச்சரியமும் திகிலும் அடைந்து ஒருவரோடு ஒருவர் வாய்விட்டுப் பேசவும் மாட்டாமல் வெட்கமும் கலக்கமும் அடைந்தவர்களாய், இனி தாங்கள் அந்தப் பங்களாவில் இருப்பது உசிதமன்று என நினைத்து, ஒவ்வொருவராக எல்லோரும் அந்தச் சாயுங்காலத்திற்குள் அவ்விடத்தைவிட்டுத் தத்தம் வீடுகளிற்குச் சென்றுவிட்டனர். பாச்சாமியான் முதலியோருடன் சென்ற ஆண்பாலரான சகலமான ஜனங்களும் மறுபடியும் பங்களாவிற்குத் திரும்பி வராமலேயே போய்விட்டனர். சுந்தரமூர்த்தி முதலியார் ஒருவர் மாத்திரம் சாயுங்காலத்திற்குப் பிறகு திரும்பி வந்து தாங்களும்

தங்களது ஜாகைக்குப் போகலாம் என்றும், புறப்பட்டு வரும் படியாகவும் புஷ்பாவதிக்குச் செய்தி சொல்லி அனுப்பினார். புஷ்பாவதி அவ்வாறு செய்தி கொண்டுவந்த மனிதனுக்கு பூஞ்சோலையம்மாள், கோகிலாம்பாள் ஆகிய இருவரும் அறியும்படி மறுமொழி சொல்லியனுப்பினாள். கற்பகவல்லி யம்மாள் நிரம்பவும் பரிதாபகரமான நிலைமையில் இருப்பதால் அந்தச் சந்தர்ப்பத்தில் அவர்களை விட்டு தாம் தமது பங்களா விற்குப் போக மனம் இடம் கொடுக்கவில்லை என்றும், ஆகை யால் தான் அன்றைய இரவு முழுதும் இருந்து மறுநாட் காலையில் புறப்பட்டு வருவதாகவும், அவர் போகலாம் என்றும் புஷ்பாவதி தனது தமயனுக்குச் செய்தி சொல்லியனுப்பியது அன்றி, தானும் சிறிதுநேரம் அவ்விடத்தைவிட்டுப் போய்த் தனது அண்ணனிடத்தில் பேசிக்கொண்டிருந்து அவரை அனுப்பி விட்டு வந்து சேர்ந்தாள். அன்றையதினம் ஏற்பட்ட பெருத்த மான ஹானியில், சுந்தரமூர்த்தி முதலியாரும் அங்கேயே இருக்க வேண்டும் என்று உபசரிக்க பூஞ்சோலையம்மாளுக்கு முகம் இல்லை. அந்த அம்மாளது மனம் சுத்தமாக இடிந்து உட்கார்ந்து போய்விட்டது. ஆகையால், தான் என்ன செய்வது என்பதும் தோன்றவில்லை; பிற மனிதரது முகத்தில் விழிப்பதற்கும் மனம் கூசியது. ஆனால் புஷ்பாவதி மாத்திரம் அவர்களுக்கு அநுகூலமா கவே இருந்து இரக்கமும் அநுதாபமும் அந்தரங்க விசுவாசமும் காட்டி வந்ததைக் கருதி, அவளை அனுப்பிவிட மாத்திரம் விரும்பாமல் இருந்தாள். கண்ண பிரானுக்குப் பரிந்து பேசி வாதாட ஒரு வக்கீலை அமர்த்தும் விஷயத்தில், சுந்தரமூர்த்தி முதலியார் தங்களுக்கு உதவி செய்வார் என்று புஷ்பாவதி காலையில் சொன்ன விஷயம் கோகிலாம்பாளுக்கு நன்றாக நினைவிருந்தது. ஆனாலும் கற்பகவல்லியம்மாளுக்கு ஏற்பட்ட பெருத்த இழிவிற்குப் பிறகு சுந்தரமூர்த்தி முதலியாரது மனநிலைமை எப்படி மாறிப்போயிருக்குமோ என்றும், அவர் தங்களது சம்பந்தத்தை இனி நாடுவாரோ மாட்டாரோ என்றும், தங்களுக்கு உதவி செய்வாரோ மாட்டாரோ என்றும், பலவாறு ஐயமும், அச்சமும், வெட்கமும் அடைந்தவர்களாய் கோகிலாம் பாளும், சுந்தரமூர்த்தி முதலியாரது புறப்பாட்டிற்கு எவ்வித ஆட்சேபணையும் சொல்லாமல் இருந்துவிட்டாள். ஆகவே, அவரும் புறப்பட்டுப்போய்விட்டார். புஷ்பாவதியைத் தவிர மற்ற அயலார் ஒருவர்கூட மிகுதியில்லாமல் எல்லோரும் போய்

விட்டனர். நிரம்பவும் அழகாகவும் உன்னதமாகவும் அலங்கரிக்கப்பட்டிருந்த அந்தப் பிரம்மாண்டமான பங்களா உயிரற்ற வெற்றுடம்பு போலவும், பாழடைந்த மண்டபம் போலவும் பயங்கரமாகத் தோன்றியது. வேலைக்காரர்களும், வேலைக்காரிகளும் அன்றைய தினம் நிகழ்ந்த இரண்டு சம்பவங்களையும் கண்டு, அவைகளை உண்மையென்றே நம்பினார்கள். ஆகையால், தங்களது எஜமானியம்மாளுக்கும் பெண்ணிற்கும் நேர்ந்த பிரமாதமான அவமானத்தையும் தலைகுனிவையும் நினைத்து நினைத்து மட்டுக்கடங்காத் துயரமும், அவமானமும், சோர்வும் அடைந்து தளர்ந்து மூலைக்கு மூலை முட்டு முட்டாக உட்கார்ந்து கொண்டிருந்தனர். அன்றைய பகல் முழுதும் பூஞ்சோலையம்மாள் கோகிலாம்பாள் ஆகிய இருவருக்கும் ஆகாரம் முதலிய எந்த தேகபாதையிலும் மனம் நாடவில்லை; புஷ்பாவதி முதலியோரையும் உண்ணும்படி சொல்லி உபசரிக்க வேண்டும் என்பதும் தோன்றவில்லை.

அப்படிப்பட்ட விவரிக்க சாத்தியமில்லாத மகா துக்ககரமான நிலைமையில் இருந்தபடியே, அவர்கள் கற்பகவல்லியம்மாளைத் தெளிவித்தனர். தங்களுக்கு ஏற்பட்ட அத்தகைய அபாரமான இழிவிலிருந்து நாம் எப்படி விலகுவது என்ற ஒரே கவலை மாத்திரம் அவர்களது மனதைத் துளைத்துச் சித்திரவதை செய்து கொண்டிருந்ததேயன்றி, கற்பகவல்லியம்மாள் அப்படிப்பட்ட கேவலமான நடத்தை உடையவள் அல்ல என்பதை மாத்திரம் அவர்களது மனம் உறுதியாக நம்பியது. அன்றையதினம், பிள்ளையின் பேரிலும், தாயின் பேரிலும் ஏற்பட்ட இரண்டு அவதூறுகளும், காலகதியினால், போலீசாரால் கற்பிக்கப்பட்ட பொய்க் குற்றங்களாக இருக்கலாம் என்றும், தாயும் பிள்ளையும் மாசுமறுவற்ற நல்ல நடத்தை உடையவர்கள் என்றும், அவர்கள் புஷ்பாவதியிடத்தில் சொல்லிக்கொண்டிருந்தபடியே, கற்பகவல்லியம்மாளது விஷயத்தில் கரைகடந்த இரக்கமும், பச்சாதாபமும், வாஞ்சையும் காண்பித்து அந்த அம்மாளைத் தேற்றி, ஏதாவது ஆகாரம் சாப்பிடும்படி வருந்தி உபசரித்துக் கொண்டிருந்தனர்.

கற்பகவல்லியம்மாள் தனது கண்களைத் திறந்து அவர்களது முகத்தில் விழிக்கவும், வாயைத் திறந்து அவர்களோடு பேசவும்

மாட்டாமல் வெட்கி, மிகவும் குன்றிப்போய், உயிரற்ற சவம் போலக் கிடந்தாள் ஆனாலும், அப்படிப்பட்ட மகா சோதனை யான காலத்திலும் அந்தத் தனிகர்களாக புண்ணிவதிகள் தன்னைக் கைவிடாமலும் தன்னைப்பற்றி இழிவான அபிப்பிராயம் கொள்ளாமலும் முன்போலவே, மரியாதை, வாஞ்சை முதலிய வற்றைத் தோற்றுவிப்பதைக் காணக்காண அவள் நன்றியறிதலி னால் உருகிக் கண்ணீர் விடுத்ததன்றி, அவர்களிடத்தில் பேசு வதற்கு ஒரு சிறிது துணிவடைந்தவளாய்ப் பூஞ்சோலையம் மாளை நோக்கி, "அம்மா! உங்கள் இருவரைப் போலத் தங்க மான மனசையுடைய மனிதர்கள் இந்த உலகத்தில் இருப்பார்கள் என்று நான் நினைக்கவே இல்லை. எங்களால் உங்களுக்கு இன் றையதினம் நேர்ந்த விசனமும், அவமானமும் பழியும் கொஞ்சம் நஞ்சமல்ல. உங்களுடைய நிலைமையில் வேறே யாராவது இருந்தால், இந்நேரம் என்னை அவமானப்படுத்தி வெளியில் துரத்தியிருப்பார்கள். நீங்களோ உங்களுடைய மனசிலுள்ள சஞ்சலங்களையெல்லாம் அடக்கிக்கொண்டு, இந்த மகாபாவிக்கு விடாமுயற்சியோடு இன்னமும் உபசாரம் செய்துகொண்டி ருக்கிறீர்கள். என்னவோ, இந்தச் சமயத்தில், உங்களுக்கு எங்களால் இப்படிப்பட்ட இழிவும் அவமானமும் ஏற்பட் டாலும், ஈசுவரன் உங்களுக்கு ஒரு குறையும் வைக்கமாட்டான். நாங்கள் பரம தரித்திரர்கள்; எப்போதும் ஏழ்மையிலும் தாழ்மையிலும் இருந்து கஷ்டப்படப் பிறந்தவர்கள். அப்படிப் பட்ட கருத்தோடு கடவுள் எங்களைப் படைத்திருக்க, அவரு டைய திருவுளத்துக்கு மாறாக நீங்கள் எங்களைத் திடீரென்று இப்படிப்பட்ட மகோன்னத பதவிக்கு உயர்த்தி எங்களையும் உங்களுக்குச் சரிசமானமாகச் செய்ய முயன்றால், அது பலிக்குமா? குபேர பட்டணம் கொள்ளை போனாலும் எங்களைப்போன்ற நித்திய தரித்திரர்களுக்கு அந்த இடத்தில் அடியும் உதையுந்தான் கிடைக்குமன்றி, காதறுந்த ஓர் ஊசி கூடக் கிடைக்காது; எங்கள் தலைப்பொறியை நாங்கள் தொலைத்தே தீரவேண்டும். அதற்கு மாறாக நாங்கள் நடந்தால், மீளாத்துன்பமும் ஆராத்துயரமும் தீரா அவமானமும் சம்பவிப்பது நிச்சயம்; ஆகையால் இனிமேல் ஒரு விநாடி நேரம்கூட நான் இங்கே இருப்பது சரியல்ல; எங்க ளால் உங்களுக்கு இன்றைய தினம் முழுதும் ஏற்பட்ட துக்கமும்

அவமானமும் போதும். நான் இங்கே இருந்தால் இன்னமும் உங்களுக்கு ஏதாவது பெருத்த பொல்லாங்கு வந்து நேரும்; ஆகையால், நான் என்னுடைய ஜாகைக்குப் போய்ச் சேரு கிறேன். என்மேல் கருணை கூர்ந்து, என்னை ஒரு வண்டியில் வைத்து என்னுடைய வீட்டில் கொண்டுபோய் விட்டுவிடச் செய்யுங்கள். உங்களுக்கு அந்தக்கோடி புண்ணியமுண்டு; மேகங்கள் கைம்மாறு கருதாமல் அமிர்தம் போன்ற ஜலத்தை உலகத்தாருக்குப் பொழிவது போல, நீங்கள் எங்கள் விஷயத்தில், அன்பையும் ஆதரவையும், மரியாதைகளையும் இதுவரையில் மழைபோலப் பொழிந்ததையெல்லாம் நான் என்றைக்கும் மறக்க மாட்டேன். நீங்கள் சந்தோஷமாகவும் சௌக்கியமாகவும் நீடூழி காலம் இருந்து வாழவேண்டும் என்று நான் சதா காலமும் கடவுளைத் துதித்துக்கொண்டே இருப்பேன் என்பது உறுதி'' என்று கரைகடந்த உருக்கமும், வாஞ்சையும், விசனமும் தோன்றக் கூறினாள். அவளது கண்களிலிருந்து கண்ணீர் பொங்கி மாலையாக வழிந்தது. மனவெழுச்சியும், அழுகையும் கிளம்பி நெஞ்சை அடைத்து முகத்தை விகாரப்படுத்தின; உடம்பும் கை கால்களும் காற்றில் நடுங்கும் மாந்தளிர் போலப் பதறுகின்றன. அந்த அம்மாளது நிலைமை மகா பரிதாபகரமாகவும் அதைக் காணும் கல்லும் கரைந்துருகி வாய்விட்டு அழத்தக்கதாகவும் இருந்தது. அந்த அம்மாளது உருக்கமான சொற்களைக் கேட்கவே, பூஞ்சோலையம்மாளுக்கும் கோகிலாம்பாளுக்கும் மனம் கலங்கியது. கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது. தேகம் கிடுகிடென்று ஆடியது. அவர்கள் இருவரும் தங்களது விசனத்தைப் பொறாமல் முன்தானையால் கண்களைத் துடைத்துக் கொண்டனர். தனது தாய் என்ன மறுமொழி சொல் லுகிறது என்பதை உணராமல் தயங்கியதைக் கண்ட கோகிலாம் பாள், தான் அந்தச் சமயத்தில் பேசியே தீரவேண்டும் என்று நினைத்தவளாய் நிரம்பவும் வணக்கமாகவும் மரியாதையாகவும் கற்பகவல்லியம்மாளை நோக்கி, "அம்மா! தாங்கள் இப்படி விசனப்படுவது எங்களுடைய மனதை வாள்கொண்டு அறுக் கிறது. இன்றைய தினம் நேர்ந்த இரண்டு தீமைகளிலிருந்தும் நாங்கள் தங்களை வெறுத்து விலக்கி விடுவோம் என்றாவது, நாங்கள் தங்களிடத்தில் வைத்திருக்கும் மரியாதை மதிப்பு, நல்ல

அபிப்பிராயம் முதலியவைகளுக்குக் கொஞ்சமாவது குறைவு ஏற்படும் என்றாவது தாங்கள் நினைத்துக் கவலையே கொள்ள வேண்டாம். இன்றைய தினம் நேர்ந்த விஷயங்கள் எல்லாம் ஈசுவரனுடைய சோதனையே தவிர வேறல்ல என்பது எங்களுக்கு நிச்சயமாகத் தெரியும். இப்படிப்பட்ட இழிவான காரியங்களை யெல்லாம் நீங்கள் செய்யக் கூடியவர்களல்ல என்பதும் எங்களு டைய உறுதியான எண்ணம். முன்காலத்தில் சந்திரமதிக்கு நேர்ந்த மகா பயங்கரமான பழியைவிட இது ஒரு பெரிய தீமையா? தன்னுடைய நாடு நகரங்களையும், ராஜ்யத்தையும், சுகபோகங்களையும், சம்பத்தையும், பெருமையையும், இழந்து புருஷனைவிட்டுப் பிரிந்து, குழந்தையை நாகப்பாம்புக்கும் இரை கொடுத்து, அதைக் கொளுத்த ஒரு முழத்துண்டுக்கும், ஒரு பிடி வாய்க்கரிசிக்கும் வகை இல்லாமல் தத்தளித்து நள்ளிரவில் சுடுகாட்டிலிருந்து வீட்டிற்குத் திரும்பி வந்து போகையில் காசிராஜனது குழந்தையைக் கொன்று விட்டாள் என்ற அடாப்பழி வந்து லபித்ததே! அப்படிப்பட்ட பேரிடியையும், அபாண்டமான பழியையும்விட அதிகமாக இனி இந்த உலகத்தில் யாருக்காவது துன்பங்கள் நேரப் போகின்றனவா? சந்திரமதியோ ஒரு மகா சக்கரவர்த்தியின் பட்ட மகஷி. நாமெல் லாம் எந்த மூலை? உலகத்தார் நம்மைப்பற்றி எப்படியாவது நினைத்துக் கொள்ளட்டும். மனசுக்கு மனசே சாட்சி என்று, நாம் திரிகரண சுத்தியாக எவ்விதத் தவறையும் செய்யாது இருக் கையில், நமக்குப் பிறரிடத்திலும் பயமில்லை; கவலைப்பட வாவது லஜ்ஜைப்படவாவது நியாயமும் இல்லை. வருவது வரட்டும் என்று நினைத்து மனதின் தைரியத்தை விடாமல் நம்மாலான முயற்சிகளை நாம் செய்வதே உசிதமான காரியம். உங்களுக்கும் எங்களுக்கும் ஏற்பட இருந்த சொந்தம் ஏற்பட்ட மாதிரியே; இனி நாங்கள் பின்வாங்கப் போகிறதில்லை. எது எப்படியானாலும் இந்தக் கலியாணம் என்றைக்கும் முடிந்தே தீரும். தங்களுடைய குமாரரே என்னுடைய பர்த்தாவென்று நான் எப்போது எண்ணினேனோ, அந்த எண்ணம் இனி என்னு டைய உயிர் இருக்கிற வரையில் மாறப்போகிறதில்லை. ஒரு வரை ஒரு பெண் புருஷராக எண்ணிவிட்டால், அவருக்கு நியாயமாகவோ அநியாயமாகவோ ஏற்படும் நன்மை தீமைகளை

யெல்லாம் அந்தப் பெண்ணும் அநுபவிக்கக் கடமைப்பட்டவ ளாகி விடுகிறாள். அப்படி அநுபவிக்கப் பின் வாங்கினால், அவள் குடும்ப ஸ்திரீயல்ல; கேவலம் புருஷருடைய நன்மையை மாத்திரம் பங்கு போட்டுக்கொள்ள முன்வரும் தாசிகளுக்கு சமம் ஆவாள். ஆகையால், நாங்கள் இந்த ஏற்பாட்டிலிருந்து விலகிக்கொள்ளப் போகிறதில்லை. சாஸ்திரப்படி இந்தக் கலியாணம் நிறைவேறாது இருந்தாலும் வியவகாரத்திற்கும் நியாயத்திற்கும், அது நிறைவேறிவிட்டதாகவே, நாங்கள் மதிக்கிறோம். நாம் நாளை தினம் காலையில் யாரையாவது மனிதரை அனுப்பி, சாமர்த்தியசாலியான ஒரு வக்கீலை அமர்த்தி வாதாடி தங்களுடைய குமாரரை விடுவிக்கச் செய்வோம். அந்த விஷயத்தில் லக்ஷம் ரூபாய் செலவு செய்ய வேண்டுமானாலும், செய்து நாம் செய்யக்கூடிய பிரயத்தனங்களையெல்லாம் செய்து பார்த்துவிடுவோம். அதோடு, இப்போது வந்த துருக்கன் யார் என்பதையும் விசாரித்து அறிந்து, அவனுக்குத் தகுந்த சிக்ஷை நடத்தி வைப்போம். நாங்கள் தங்களுடைய வீட்டுக்குப்போவது நல்லதல்ல. போலீசார் தங்களுடைய வீட்டின் கதவை பலவந்த மாகத் திறந்து உட்புறத்தில் என்னென்ன அக்கிரமங்கள் செய்தி ருக்கிறார்களோ தெரியவில்லை. அதுவும் தவிர வீட்டின் திறவு கோல் இப்போது யாரிடத்தில் இருக்கிறது என்பதும் தெரிய வில்லை. தாங்கள் இப்போது ஆண் துணையில்லாமல் அந்த வீட்டில் தனியாக இருந்தால், இவ்வளவு பெருத்த தீம்பைக் கொண்டு வந்து வைத்தவர்கள் இன்னும் என்னென்ன அக்கிர மங்கள் செய்வார்களோ தெரியவில்லை. இப்போது இங்கே வந்த முரட்டு மனிதர்கள் அங்கேயும் வந்து ஏதாவது கலகம் செய்து அவமானப்படுத்துவார்கள். ஆகையால், தாங்கள் இதையே தங்களுடைய சொந்த கிரகம் போல மதித்து, சௌகரியம்போல இருங்கள். பணத்தின் மூலமாகவும், தேகத்தின் மூலமாகவும், எங்களால் என்னென்ன உதவிகள் செய்ய முடியுமோ, அவைகளை எல்லாம் கொஞ்சமும் லோபமில்லாமல் நாங்கள் சந்தோஷத்தோடு செய்கிறோம்; இனி நீங்கள் வேறு, நாங்கள் வேறு என்ற எண்ணமே தங்களுடைய மனசில் உண்டாகக் கூடாது. இரண்டையும் ஒன்றாகவே பாவிக்க வேண்டும்'' என்று நிரம்பவும் விநயமாகவும், வாத்சல்யத்தோடும், இனிமையாகவும் கூறினாள்.

அந்த மடமயிலின் அன்பு ததும்பிய மாதுரியமான மொழிகளைக் கேட்ட கற்பகவல்லியம்மாள் ஒரு நிமிஷநேரம் தனது சகலமான துன்பங்களையும் துயரங்களையும் மறந்து ஆநந்த பரவசம் அடைந்து பூரித்துப் புளகாங்கிதம் எய்தினாள். அவள் அதுவரையில் கோகிலாம்பாள் பேசியதைக் கேட்டவளன்று, ஆதலால், அந்த இன்பவல்லி மகா உருக்கமாகவும், பரிவாகவும், பணிவாகவும், பெருந்தன்மையாகவும், அன்பே நிறைவாகவும் பேசிய கனிமொழிகளைக் கேட்க, அப்படிப்பட்ட விலையில்லா மாணிக்கம் தனக்கு மருமகளாக வாய்க்கப்போவது, தானும் தனது முன்னோரும் எத்தனையோ ஜென்மங்களில் செய்த பூஜா பலனே அன்றி வேறல்ல என்று நினைத்துப் பெருமையும் மன வெழுச்சியும் அடைந்து மட்டுக்கடங்காப் பெரு விம்மிதம் எய்தி இரண்டொரு நிமிஷநேரம் பேரின்ப வாரிதியில் தோய்ந்திருந்தபின், கண்கள் ஆநந்த நீர் சொரிய, அவளைப் பார்த்து, "கண்ணே! உன்னுடைய வார்த்தையைக் கேட்க, என்னுடைய கலியெல்லாம் நீங்கினாற் போன்ற ஒரு திடமும், ஆநந்தமும் பூரிப்பும் என் மனசில் சுரக்கின்றன. ஏதோ எங்களுடைய நல்ல கிரகந்தான் இப்படிப்பட்ட அபாய காலத்தில், எங்களை இங்கே கொண்டு வந்துவிட்டு, உங்களுடைய நட்பையும் எங்களுக்குச் செய்து வைத்தது. இனி நீங்கள் எப்படிச் சொல்லுகிறீர்களோ அப்படியே நான் செய்யத் தடையில்லை. நீ சொன்னபடி, நாங்கள் வேறு நீங்கள் வேறு என்ற நினைவையே நான் விட்டு விட்டேன். இனி எல்லாவற்றையும் உங்களுடைய பிரியப்படியே நடத்துங்கள்" என்று கரை கடந்த வாத்சல்யத்தோடு மனம் நைந்து கனிவாகக் கூறினாள்.

அதைக்கேட்ட பூஞ்சோலையம்மாள் மிகுந்த சந்தோஷமும் பூரிப்பும் அடைந்தவளாய்க் கற்பகவல்லியம்மாளைப் பார்த்து, "அம்மா! நீங்கள் காலையில்கூட அதிகமாக ஒன்றையும் சாப்பிடவில்லையே; ஏதாவது கொஞ்சம் ஆகாரம் பார்த்துக்கொண்டு நிம்மதியாகப் படுத்துக் கொள்ளுங்கள். புஷ்பாவதியம்மாள் முதலியோரும் நெடுநேரமாகப் பட்டினியிருக்கிறார்கள். நாங்கள் போய் அவர்களுக்கு எல்லாம் போஜனம் நடத்தி வைக்கிறோம். எல்லோருக்கும் விருந்து நடத்துவதற்காகத் தயாரித்து மலை

மலையாகக் குவித்து வைத்திருந்த விருந்துப் பொருள்களை எல்லாம் ஜனங்கள் சாப்பிட்டார்களோ என்னவோ ஒன்றும் தெரியவில்லை. நாம் ஒன்று நினைக்க தெய்வம் ஒன்று நினைத்தது; எல்லோரும் சந்தோஷப்படும்படி விருந்து செய்ய நினைத்ததற்கு, எல்லோருக்கும் உபவாசமும் துயரமும் அவமானமுமே ஏற்பட்டன. என்ன செய்கிறது? எல்லாம் கால பலன்'' என்றாள்.

அதைக்கேட்ட கற்பகவல்லியம்மாளும் மிகுந்த சஞ்சலம் அடைந்தவளாய்ப் பேசத்தொடங்கி, ''ஆம்; என்ன செய்கிறது? அரச மரத்தைப் பிடித்த சனியன் பிள்ளையாரையும் பிடித்தது என்பார்கள். அதுபோல எங்களுடைய துரதிர்ஷ்டத்தில் மற்ற எல்லாருக்கும் பங்கு கிடைத்தது. எனக்கு இப்போது சாப்பாட்டிலேயே மனம் செல்லவில்லை. பேசாமல் நிம்மதியாகப் படுத்துக்கொண்டிருந்தால், அதுவே போதுமானது. ஆனால் நான் ஆகாரம் வேண்டியதில்லை என்று சொன்னாலும், நீங்கள் என்னை விடப்போகிறதில்லை. ஆகையால் சொற்பமாக ஏதாவது ஆகாரம் இவ்விடத்துக்கே அனுப்பி விடுங்கள். இங்கேயே சாப்பிட்டுவிட்டுப் படுத்துக்கொள்ளுகிறேன்,'' என்று கூறினாள்.

அதைக் கேட்ட உடனே கோகிலாம்பாள் தானே நேரில் சென்று ஆகாரம் எடுத்து வந்து தனது மாமியாருக்குப் போஜனம் செய்விப்பதாகக் கூறி, புஷ்பாவதியை அழைத்துக் கொண்டு போய் உண்பிக்கும்படி தனது தாய்க்குச் சொல்ல, பூஞ்சோலையம்மாள் அந்த ஏற்பாட்டிற்கு இணங்கினாள். உடனே அவர்கள் இருவரும், கற்பகவல்லியம்மாளை அவ்விடத்திலே இருக்க வைத்துவிட்டு, புஷ்பாவதியை அழைத்துக் கொண்டு அப்பால் போயினர். பங்களாவில் பணிமக்கள் மாத்திரம் இருந்ததையும், விருந்தினர் எல்லோரும் போய்விட்டதையும் கோகிலாம்பாளும் பூஞ்சோலையம்மாளும் அப்போது கண்டு கரைகடந்த துயரமும், சஞ்சலமும் அடைந்தவர்களாய்ச் சிறிது நேரம் வருந்தி இருந்த பின்னர், புஷ்பாவதிக்கு உபசார வார்த்தைகள் கூறி அவளுக்கு இலை போட்டு பரிமாறும்படி உத்தரவு செய்ய, பரிசாரகர் அப்படியே செய்தனர். புஷ்பாவதி, பூஞ்சோலையம்மாளும் உட்கார்ந்தால் அன்றித் தான் மாத்திரம் உட்கார்ந்து போஜனம் செய்

வதில்லை என்று கூற, அந்த அம்மாளும் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டாள். உடனே கோகிலாம்பாள் நல்ல உயர்ந்தவகைப் பதார்த்தங்களில் கொஞ்சம் கொஞ்சம் எடுத்துக்கொண்டு போய்த் தனது மாமியாரான கற்பகவல்லியம்மாளைப் பணி வாகவும், அன்பாகவும் உபசரித்து உண்பித்தபின் நிம்மதியாகப் படுத்துக்கொள்ளும்படி சொல்லிவிட்டு அந்த அம்மாளிடத்தில் அநுமதி பெற்றுக் கொண்டு திரும்பி வந்து சேர்ந்தாள். அதற்குள் புஷ்பாவதி தனது போஜனத்தை முடித்துக்கொண்டாள். பூஞ்சோலையம்மாள் புஷ்பாவதியின் மனம் கோணாமல் இருப் பதற்காகத் தானும் போஜனம் செய்ததாக ஒருவாறு நடித்து சொற்பகமாக ஆகாரம் பார்த்துக்கொண்டாள். அவர்கள் இரு வரும் கோகிலாம்பாளை வற்புறுத்த, அவளும் இலையண்டை உட்கார்ந்து எழுந்தாள்.

அவர்கள் மூவரும் அன்றைய பகல் முழுதும் பட்டினி கிடந்து நிரம்பவும் பாடுபட்டு அலுத்திருந்தமையால் அவர்கள் அவ்விடத்தைவிட்டுப் போய்த் தனித்தனியாக மூன்று விடுதிக ளில் இருந்த தத்தம் படுக்கைகளை அடைந்து சயனித்துக் கொண்டனர்.

பூஞ்சோலையம்மாள் அன்றைய தினம் நிகழ்ந்த மகா பயங்கரமான சம்பவங்களைப்பற்றி நினைத்து நினைத்து இரவு மூன்று மணி வரையில் தூக்கம் பிடியாமல் புரண்டிருந்து கடைசி யில் நித்திரையில் ஆழ்ந்துவிட்டள். கோகிலாம்பாளோ அன்றையதினம் நிகழ்ந்த மகா பயங்கரமான சம்பவங்களை நினைத்தும் கண்ணபிரானை நினைத்தும் உருகிக் கரைந்து அழுது, தனது சயனம் முழுதும் கண்ணீர் ஆறாயப் பெருகும்படி செய்து, அளவிட இயலாத சஞ்சலக் கடலில் ஆழ்ந்து அந்த இரவு முழுதும் இமைகளையே மூடாமல் படுத்துப் புரண்டு புழுங்கித் துவண்டு வாடித் தளர்ந்து துயரமே வடிவாகக் கிடந்தாள்.

மகா உத்தமகுண ஸ்திரீகளான பூஞ்சோலையம்மாள் கோகி லாம்பாள் முதலியோரது நிலைமை இவ்வாறு இருக்க, போஜனம் முடித்துக் கொண்ட பிறகு சயனத்தில் படுத்த புஷ்பாவதி, நித்திரை செய்பவள் போலக் கால் நாழிகை நேரம் வரையில் பாசாங்கு செய்தாள். மற்ற இருவரும் தத்தம்

சயனத்திற் படுத்துக்கொண்டார்கள் என்பதை நிச்சயித்துக் கொண்டவளாய், அந்த யௌவன ஸ்திரீ மெதுவாகத் தனது சயனத்திலிருந்து எழுந்து, சந்தடி செய்யாமல் விரல்களை ஊன்றி நடந்து அவ்விடத்தை விட்டு வெளியில் சென்றாள். சென்றவள், தான் அவ்வாறு போவதை யாராவது பார்த்துவிடப் போகிறார் களே என்ற அச்சம் கொண்டவள்போல அங்கும் இங்கும் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டு, பக்கத்தில் இருந்த சில விடுதிகளைக் கடந்து, சிறிது தூரத்திற்கு அப்பால் இருந்த அலங் காரமான ஒரு சயன மாளிகையை அடைந்து, அதன் கதவை மெதுவாகத் தட்ட சிறிது நேரத்தில் அந்தக்கதவு திறக்கப்பட்டது. உட்புறத்தில் விளக்கு ஜாஜ்வல்லியமாகப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. சகலமான இன்பங்களும் அழகும் நிறைந்து ரதி தேவியின் சயனமாளிகைபோல இருந்த அந்த விடுதிக்குள் இருந்த கதவை திறந்துவிட்ட நமது சௌந்தரவல்லியம்மாள் புஷ்பாவதி வந்திருந்ததைக் கண்டு மகிழ்ச்சியாகப் புன்னகை செய்து, ''வாருங்கள்; வாருங்கள்'' என்று கூறி, அவளை உபசரித்து உள்ளே அழைத்துக்கொண்டு போய் ஒரு ஸோபாவின் மீது உட்காரவைத்துத் தானும், பக்கத்தில் இருந்த ஒரு நாற்காலியின் மீது உட்கார்ந்து கொண்டாள்.

நிச்சயதார்த்த தினத்திற்கு முதல் நாள் மாலையில், கோகிலாம்பாளும், கண்ணபிரானும் ஒருவரையொருவர் ஆலிங்கனம் செய்து கொண்டிருந்த காலத்தில் பின் புறத்தில் ஒளிந்திருந்த சௌந்தரவல்லியம்மாள் திடீரெனத் தோன்றித் தனது அக்காளை நிரம்பவும் இழிவாகத் தூஷித்ததும், கண்ண பிரான் அவளைச் சாந்தப்படுத்தும் பொருட்டு சொன்ன சமாதா னங்களைக் கேட்டும், அவள் கோபமாகவும் முறுக்காகவும் பங்களாவை நோக்கிச் சென்றதும் தெரிந்த விஷயங்கள். அவ்வாறு வந்தவள் நேராகத் தனது தாய் இருந்த இடத்திற்குப் போய் மிகுந்த ஆத்திரத்தோடு பேசத் தொடங்கி கோகிலாம் பாளும் கண்ணபிரானும் பூங்காவிலிருந்த நிலைமையைத் தெரிவித்து, அக்காள் எப்படிப்பட்ட குற்றம் செய்தாலும் தனது தாய் கண்டிப்பதே இல்லை என்றும், தான் எவ்விதத் தவறு செய் யாதிருந்தாலும், தன்னை அநாவசியமாகக் கண்டிக்கிறாள் என்றும் கூறி நிஷ்டூரமாகப் பேச, அதைக்கேட்ட பூஞ்சோலை

யம்மாள் தனது பெண்ணின் வாயை அடக்கி, "அம்மா சௌந்தரா! என்ன உன்னுடைய புத்தி வர வர இப்படியாகிவிட்டது! நீ குழந்தை போல இப்படிப்பட்ட விஷயங்களில் எல்லாம் தலையிட ஆரம்பித்துவிட்டாயே! இந்தச் சங்கதி வேறே யாருடைய காதிலாவதுபட்டால், உனக்குத்தான் அவமானம் வந்து சேரும். ஆகையால், வாயை மூடிக்கொண்டு பேசாமல் இரு; அவர்கள் இருவரும் ஒன்றாக இருந்ததை ஜனங்கள் குற்றமாக மதிக்கமாட்டார்கள். அதைக்கண்டு அவளுடைய சொந்தத் தங்கையான நீ இப்படிப் பொறாமைப்பட்டு, அந்த ரகசியமான காரியத்தையெல்லாம் வெளியிடுகிறாயே என்று நினைத்து நீ மகா துர்க்குணி என்றும், நல்ல அறிவு இல்லாத பைத்தியக்காரி என்றும் சொல்லி உன்னைப் பற்றி ஏளனமாகப் பேசுவார்கள். ஆகையால், வாயை மூடிக்கொண்டு பேசாமல் இரு; அவளுக்கு அந்தப் பையனை நாம் புருஷனாக ஏற்படுத்திவிட்டோம். ஆனாலும், அவர்கள் இருவரும் அவ்வளவு தூரம் பதற்றமாக எந்தக் காரியத்தையும் செய்யக் கூடியவர்களல்ல. கோகிலாம்பாளின் குணம் எனக்கு நன்றாகத் தெரியும்; அவள் மகா உறுதியான மனம் உடையவள். எப்படிப்பட்ட சந்தர்ப்பமாக இருந்தாலும் அவள் தவறான வழியில் இறங்கக்கூடியவளல்ல. அவள் வந்தவுடனே உண்மை என்ன என்பதை நான் கேட்டறிந்து உனக்குத் தக்க சமாதானம் சொல்லுகிறேன். நீ சொல்லுகிறபடியே ஏதாவது சம்சயமான காரியம் நடந்திருந்தால்கூட, அதைப்பற்றி நாம் கடுமை காட்டக்கூடாது. அந்தப் பையன் அவளுக்குப் புருஷனாக வரிக்கப்பட்டுப் போயிருக்கிறான். அந்த ஏற்பாடு இனி மாறப்போகிறதில்லை. ஆகையால் யௌவனப் பருவத்தினரான அவர்கள் ஆத்திரப்பட்டுத் தங்களை மீறி அப்படி ஏதாவது செய்திருந்தால்கூட அது குற்றமாகாது. உனக்கும் ஒரு புருஷன் நிச்சயப்பட்டுப் போனால் நீ கூட நாளைக்கு அப்படித்தான் செய்வாய், அதையெல்லாம் நாங்கள் கண்டித்தால், அது உன் மனசுக்கு எவ்வளவு கஷ்டமாக இருக்கும். இந்த விஷயத்தை வாயில் வைத்தே இனி நீ பேசாதே; அது நல்லதல்ல. கேட்பவர்கள் உன்னைத்தான் தூஷிப்பார்கள்" என்று அன்பாகவும் நயமாகவும் கூறி, அவளை அனுப்பிவிட்டாள். தனது தாய் சொன்ன வார்த்தைகள் அவளது மனதிற்குச் சமாதானம் உண்டாக்க

வில்லை. தனது தாயும் அக்காளும் எப்போதும் ஒரே கட்சி என்றும், ஒருவரை ஒருவர் விட்டுக் கொடுக்காமல் பேசுகிறவர்கள் என்றும் சௌந்தரவல்லியம்மாள் தனக்குள் நினைத்து மிகுந்த கோபமும் ஆத்திரமும் அடைந்தவளாய், அவ்விடத்தைவிட்டு முறுக்காக நடந்து தனது அந்தப்புரத்திற்குப் போய்க் கட்டிலின் மேல் குப்புறப்படுத்துக்கொண்டாள். அதன் பிறகு அவள் அன்றைய ராத்திரி போஜனத்திற்கே வரவில்லை. தனது தாயும் பணிமக்களும் எவ்வளவோ நயந்து வேண்டிய தெல்லாம் பயனற்றுப் போயிற்று. மறுநாட் காலையில், நிச்சய தார்த்தத்திற்கு எல்லோரும் அவளை எவ்வளவோ கெஞ்சிப் பார்த்தனர். அவள் எதற்கும் அசையாமல் கல்போலப் படுத்துப் பிணங்கிக் கொண்டிருந்தாள். முகூர்த்தத்திற்கு ஏற்படுத்தப்பட்டி ருந்த காலம் நெருங்கிப் போனதைக் கருதி பூஞ்சோலையம்மாள் அவளை அதே நிலைமையில் விட்டுப் போக நேர்ந்தது.

அதன் பிறகு கோகிலாம்பாளுக்கு நலங்கு நடந்த காலத்தில் போலீசார் வந்து, திருட்டுக்குற்றம் சுமத்திக் கண்ணபிரானுக்கு விலங்கிட்டு அவனை அழைத்துக்கொண்டு போய்விட்டார்கள் என்பதைக் கேட்டபிறகே, சௌந்தரவல்லியின் மனம் சிறிது குளிர்ந்தது. அவளது முகம் சந்தோஷத்தினால் மலர்ந்தது. மற்ற சகலமான ஜனங்களும் விசனக்கடலில் ஆழ்ந்து அவமானத் தினால் குன்றிப்போயிருந்த காலத்தில் அவள் ஒருத்தியே மிகுந்த உற்சாகமும் குதூகலமும் அடைந்தவளாய்த் தனது படுக்கையை விட்டு எழுந்து சென்று, நீராடித் தன்னை நன்றாக அலங்கரித்துக் கொண்டு, சமையலறைக்குப் போய் எல்லோருக்கும் தயாரிக்கப் பட்டிருந்த விருந்தைச் சம்பிரமமாக உண்டு, தாம்பூலம் தரித்துக் கொண்டு தனது சயன அறைக்கு வந்து சேர்ந்தாள். அவள் அவ்வாறு திரும்பி வந்தபோது, கோவிந்தபுரம் ஜெமீந்தாரரது குமாரரான சுந்தரமூர்த்தி முதலியார் தற்செயலாக அவளது திருஷ்டியில் பட்டார். அவர் ஒரு மகாராஜன் போல வெகு சொகுஸாக அலங்கரித்துக்கொண்டு யௌவனமும் அழகும் வடி வெடுத்ததுபோல இருந்ததைக்காண, அவளது மனம் முற்றிலும் அவர்மீது சென்று லயித்துவிட்டது. அவர் தன்னைக் கலியாணம் செய்துகொள்வதாக ஒப்பந்தம் ஆகி இருக்கிறது என்பதை அவள் தனது தாய் மூலமாக முன்னரே அறிந்தவளாதலால், அவரது

விஷயத்தில் அவளது மனத்தில் கட்டிலடங்கா மையலும், மோக விடாயும் ஏற்பட்டுவிட்டன. கண்ணபிரானும் கோகிலாம் பாளும் பூங்காவில் சரஸ ஸல்லாபம் செய்துகொண்டிருந்தது சரியான காரியம் என்றும் அதைத் தாங்கள் கவனிக்கக் கூடாது என்றும் தனது தாய் சொன்னதும் அவளுக்கு அந்தச் சந்தர்ப்பத்தில் நினைவிற்கு வந்தது. தனக்கும் சுந்தரமூர்த்தி முதலியாருக்கும் ஒரு மாத காலம் கழித்துக் கலியாணம் நடக்கும் வரையில் தனது மோக வேட்கையை அடக்கி வைப்பது சாத்தியமில்லாத காரிய மாகத் தோன்றியது. ஆகவே தனது அக்காள் செய்ததுபோல, தானும் சுந்தரமூர்த்தி முதலியாரை எப்படியாவது தனிமையான ஓர் இடத்திற்கு வரவழைத்து அவரோடு பேசிக் கொஞ்சி குலாவி சரஸ ஸல்லாபம் புரியவேண்டுமென்ற ஆசையும் ஆவலும் எழுந்து அவளது மனத்தை வதைத்துப் பெருகிக் கொண்டி ருந்தன. தான் தனது கருத்தை சுந்தரமூர்த்தி முதலியாருக்கு எப்படித் தெரிவிப்பது என்று தத்தளித்திருந்த சமயத்தில் புஷ்பாவதியம்மாள் அவளைப் பார்ப்பதற்காக அன்றைய தினம் பகலில் அங்கே வந்தாள். புஷ்பாவதியம்மாள் தனது புருஷனது தங்கை என்பதை அறிவாள் ஆதலாலும், அவள் தன்னிடத்தில் குதூகலமாகவும், பிரியமாகவும் பேசினாள் ஆதலாலும், சுந்தர மூர்த்தி முதலியார் அவளிடத்தில் தனியாகப் பேசவேண்டு மென்று ஆசைப்படுவதாகச் சொன்னாள் ஆதலாலும், சௌந்தர வல்லியம்மாள் தனது மனத்திலிருந்த ரகசியங்களை எல்லாம் கபடமில்லாக் குழந்தைபோல அப்படியே அவளிடத்தில் வெளி யிட்டுவிட்டாள்; பூங்காவில் தனது அக்காளும் கண்ணபிரானும் செய்த காரியங்களையும், தான் கண்டபடியே வெளியிட்டு விட்டாள்.

அதைக்கேட்ட புஷ்பாவதியம்மாள் அவளும் தனது அண்ணனும் தனியான இடத்தில் சந்தித்து சந்தோஷமாக இருப்பதற்குத் தேவையான உதவியைத் தான் செய்து வைப்பதாகவும், தனது அண்ணனிடத்தில் கலந்து யோசித்து எவ்விடத்தில் எப்போது அவர்கள் சந்திப்பது என்பதை அறிந்து வந்து சொல்வதாக வாக்குறுதி செய்துவிட்டுப் போயிருந்தாள். அதன்பிறகு சௌந்தரவல்லியம்மாள் புஷ்பாவதியின் வருகையை மிகுந்த ஆவலோடும் மனோசஞ்சலத்தோடும் எதிர் பார்த்தி

ருந்தாள். அந்தச் சந்தர்ப்பத்தில் பாச்சாமியான் முதலியோர் வந்து ஆரவாரம் செய்ததையும் சௌந்தர வல்லியம்மாள் தான் இருந்த அறையின் ஜன்னலண்டை நின்று கேட்டுக்கொண்டிருந் தாள். கண்ணபிரானுக்கும், அவனது தாய்க்கும், கோகிலாம் பாளுக்கும் மேன்மேலும் ஏற்பட்ட அவமானத்தையும் இழிவை யும் காணக்காண சௌந்தரவல்லியின் மகிழ்ச்சியும் குதூகலமும் ஆநந்தமும் ஒன்றுக்கு நூறு மடங்காகப் பெருகின. தான் எப்படியாகிலும் பிரயாசைப்பட்டு அன்றைய தினம் இரவிலேயே சுந்தரமூர்த்தி முதலியாரைச் சந்தித்துப் பேசிவிட வேண்டும் என்ற தீர்மானம் பலப்பட்டு அவளை ஓயாமல் தூண்டிக் கொண்டே இருந்தது. ஆகையால், அவள் புஷ்பாவதிக்கு அன் றைய பகல் முழுதும் ஆள் அனுப்பி, தான் உடனே அவளைப் பார்க்க ஆவல்கொண்டிருப்பதாகவும், தான் கேட்டுக்கொண்ட காரியத்தை அன்றைய இரவிற்குள் புஷ்பாவதி முடித்து வைக்க வேண்டுமென்றும் பல தடவைகளில் செய்தி சொல்லியனுப் பினாள். ஆனால் புஷ்பாவதி, பூஞ்சோலையம்மாள் முதலியா ரோடு கூட இருந்து, கோகிலாம்பாள், கற்பகவல்லியம்மாள் ஆகிய இருவருக்கும் மூர்ச்சை தெளிவிப்பதற்கு உதவியாக இருந்தாளாதலால், மற்றவரிருவரும் படுத்த பிறகு எவருக்கும் தெரியாதபடி புஷ்பாவதி எழுந்து சௌந்தரவல்லியின் விடுதிக்கு வந்து சேர்ந்தாள். சுந்தரமூர்த்தி முதலியார் பங்களாவிலேயே இருக்கிறாரென்றும், புஷ்பாவதியின் மூலமாக அன்றைய இரவிலேயே அவரைத் தனது விடுதிக்கு வருவித்து அவரோடு சந்தோஷமாகப் பேசிக்கொண்டிருக்க வேண்டுமென்றும் சௌந்தரவல்லியம்மாள் நினைத்து அவளது வருகையை மிகுந்த ஆவலோடு எதிர்பார்த்திருந்தாளாகையால், அவள் வந்து கதவைத் தட்டிய உடனே மிகுந்த குதூகலமும், அடக்க முடியாத மனவெழுச்சியும் கொண்டவளாய்ப் புன்னகையால் மலர்ந்த இனிய முகத்தோடு வந்து கதவைத் திறந்து, அவளை அன்பாக உபசரித்து உள்ளே அழைத்துக்கொண்டுபோய் உட்கார வைத்தாள். ஆனால் புஷ்பாவதியின் முகம் எப்போதும்போல இனிமையாகவும் சந்தோஷமாகவும் இல்லாமல் வாட்டமடைந்து மாறிப்போயிருந்தது. அதைக்கண்ட சௌந்தரவல்லி, "அம்மா! உன்னுடைய முகம் ஒரு மாதிரி இருக்கிறது? எனக்கு நீ சந்தோஷ

சங்கதி கொண்டுவரப் போகிறாய் என்றல்லவா நான் ஆவலோடு காத்திருக்கிறேன். என்ன விசேஷம்? என்மேல் ஏதாவது கோபமுண்டா?'' என்று நயமாகக் கேட்டாள்.

உடனே புஷ்பாவதி வற்புறுத்தித் தனது முகத்தில் புன்னகையை உண்டாக்கிக்கொண்டு பேசத் தொடங்கி, ''ஐயோ பாவம்! உன் மேல் நான் கோபித்துக்கொள்ள நீ என்ன தவறு செய்துவிட்டாய்! அதெல்லாம் ஒன்றும் இல்லை. நீ இன்று காலையிலிருந்து வெளியில் வரவே இல்லை. வெளியில் அமர்க்களப்பட்டது. உனக்கு ஒன்றுமே தெரியாதுபோல இருக்கிறதே'' என்றாள்.

சௌந்தரவல்லி, ''ஓ! எனக்கு எல்லாம் தெரியுமே! கண்ணபிரானைப் போலீசார் பிடித்துக்கொண்டு போய்விட்டார்கள். யாரோ பாச்சாமியானாம் ஒருவன்; அவன் அந்தக் கற்பகவல்லியம்மாளுடைய ஆசை நாயகனாம். அவன் கற்பகவல்லியம்மாளை அழைத்துக்கொண்டு போக வந்தான். அவர்களுடைய யோக்கியதையைப் பற்றித்தான் ஊர் முழுதும் சிரிக்கிறதே. அது எனக்குத் தெரியாமல் போய்விடுமா? அக்காள், அம்மாள் இரண்டு பேர்களுடைய கருவமும் கொட்டமும் அடங்கிப் போய் விட்டனவே. அவர்கள் எப்படியாவது போகட்டும்; நமக்கென்ன? நாம் நம்முடைய காரியத்தை முடித்துக் கொண்டு சந்தோஷமாக இருப்போம். அதைப்பற்றி நீ ஏன் விசனப்படுகிறாய்?'' என்று கூறினாள்.

புஷ்பாபவதி, "நீ சொல்லுகிறது சரிதான். இருந்தாலும், இதில் இன்னொரு விஷயம் இருக்கிறது. இப்போது இருக்கும் நிலைமையைப் பார்த்தால், உன்னைக்கூட என்னுடைய தமயனார் கட்டிக்கொள்ள முடியாது போல் இருக்கிறது. அதனாலேதான் எனக்கு நிரம்பவும் விசனமாக இருக்கிறது; எங்களிடத்தில் அளவற்ற பிரியம் வைத்திருப்பவளும், மகா நற்குணவதியுமான உன்னை நாங்கள் கட்டிக்கொள்ள முடியாமல் இவர்கள் செய்துவிட்டார்களே என்பது என் மனசை அறுக்கிறது. அதற்காகத்தான் கடைசி முறையாக உன்னைப் பார்த்துவிட்டு இந்தப் பங்களாவை விட்டுப்போய் விடலாம் என்று நான் வந்தேன்'' என்று மிகவும் விசனமாகவும் கலக்கமாகவும் உருக்கமாகவும் பேசினாள்.

அதைக்கேட்ட சௌந்தரவல்லி திகைப்பும் பிரமிப்பும் ஏக்கமும் அடைந்தவளாய், ''என்ன அப்படிப் பேசுகிறாய்! கடைசி முறையாக என்னைப் பார்க்கிறதாவது? என்னை நீங்கள் கட்டிக் கொள்ளாமல் தடுத்தது யார்? கிழக்கு மேற்காகப் போகும் சூரியன் தெற்கு வடக்காகப் போனால்கூட, நான் உன்னுடைய தமயனாரைக் கட்டிக்கொள்வதைத் தடுக்க யாருக்காவது முடியுமா? விவரத்தை வெளிப்படையாகச் சொல். அதற்குத் தகுந்த வழியை நான் தேடுகிறேன்'' என்று உறுதியாகவும் அழுத்தமாகவும் கூறினாள்.

புஷ்பாவதி கண்கலக்கமும் உருக்கமும் தோன்ற விசனமாகப் பேசத்தொடங்கி, ''குழந்தாய்! உன்னுடைய அக்காளும், அம்மாளும் அவர்கள் விஷயத்தில் ஒரே பிடிவாதமான குருட்டு அபிமானம் வைத்திருக்கிறார்கள். இன்று நடந்த விஷயங்களைப்பற்றி ஊர் சிரிக்கிறது என்பதை இவர்கள் அறியவே இல்லை; கண்ணபிரான், தண்டனை அடைந்தால்கூட, அவர் ஜெயிலில் கூழ் குடித்து செக்கிழுத்துவிட்டு வந்தபிறகும், உன்னுடைய அக்காள் அவரைத்தான் கட்டிக் கொள்ளப்போகிறாளாம். பாச்சாமியான் என்ற துருக்கனை அந்தக் கற்பகவல்லியம்மாள் வைத்திருந்தாள் என்ற மகா பிரமாதமான அவமானம் நேர்ந்ததைக் கண்டும் அவர்களுடைய உறுதி மாறவில்லை. யார் எதை வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளட்டும் என்றும், நம்முடைய ஒப்பந்தத்தை நாம் நிறைவேற்றியே தீருவோம் என்றும் சொல்லிவிட்டார்கள். அந்த பாச்சாமியான் கற்பகவல்லியம்மாளை இழுத்துக்கொண்டு போயிருப்பான். அதனால் உங்களுக்கு எல்லாம் அவமானம் ஏற்படுமே என்று நினைத்து என் தமயனார் அவனை நயமாக அழைத்துக் கொண்டுபோய் வெளியில் அனுப்பிவிட்டு வந்தார். இங்கே கலியாணத்துக்கு வந்திருந்த ஆயிரக்கணக்கான ஜனங்கள் எல்லோரும், ''இன்னும் இந்தக் கற்பகவல்லியை இந்தப் பங்களாவில் வைத்திருக்கலாமா! தூ! இவர்கள் சுத்த மானங்கெட்ட இழி ஜாதியார். இவர்கள் வீட்டில் இனி நாய்கூடத் தண்ணீர் குடிக்காது. அந்தக் கற்பகவல்லியம்மாள் இனி இந்தப் பங்களாவில் இருந்தால், நீங்கள் சௌந்தரவல்லியைக் கட்டக்கூடாது என்றும், கட்டினால் உங்களை நாங்கள் ஜாதியிலிருந்து விலக்கி விடுவோம் என்றும், என்னுடைய தமய

னாரிடத்தில் சொல்லி அவரை நிரம்பவும் அவமானப்படுத்தி விட்டார்கள். நீ கேட்டுக்கொண்டதற்கு இணங்கி உன்னை வந்து பார்ப்பதாகச் சொல்லி இருந்த என்னுடைய தமயனார், அந்தக் கற்பகவல்லியை அவர்கள் இங்கே வைத்திருக்கிற வரையில், அவர் உன்னைக் கட்டிக்கொள்ள முடியாது என்றும் என்னிடத்தில் சொல்லிவிட்டு எங்களுடைய பங்களாவுக்குப் போய் விட்டார்; ஊரிலுள்ள ஜனங்கள் எல்லோரும் தூஷிக்கிறபோது அவர்களை மீறி நாங்கள் இந்தக் காரியத்தை எப்படிச் செய்கிறது? எங்களுக்கு ஏராளமான சொந்தக்காரர்களும் சிநேகிதர்களும், குடியானவர்களும் இருக்கிறார்கள். எங்களுக்கு எப்போதும் நாலு மனுஷர்கள் வேண்டும். ஊர் ஜனங்களின் பகைமையைச் சம்பாதித்துக் கொள்ள முடியவில்லை. ஆகையால், நான் போய்விட்டு வருகிறேன். இவர்கள் இந்தக் கற்பகவல்லியின் சம்பந்தத்தை அறவே ஒழித்துவிடுவார்களானால், அதன் பிற்பாடு வேண்டுமானால், நாங்கள் உன்னைக் கட்டிக்கொள்ளுகிறோம்'' என்று விசனமாகவும் இரக்கமாகவும் கூறினாள். அவளது வார்த்தைகளைக் கேட்ட சௌந்தரவல்லியின் முகம் சடக்கென்று மாறுபட்டது. பெருத்த விசனமும், கோபமும், அழுகையும் பொங்கி எழுந்தன. தனது அக்காளும், தாயும் செய்யும் காரியத்தினால், தான் ஆசைப்பட்ட புருஷனைத் தான் இழந்து விடுகிறதா என்ற ஆத்திரமும் உக்கிரமும் அவளது மனதில் கொந்தளித்து எழுந்தன. அவள் உடனே புஷ்பாவதியை நோக்கி, ''அம்மா! நீ சொல்வதெல்லாம் சரியான சங்கதிதான். இப்படிப்பட்ட ஜாதி கெட்ட துருக்கச்சியை இவர்கள் இந்த வீட்டில் வைத்திருந்தால், யார் தான் இவர்களுடைய வீட்டுக்குள் நுழைவார்கள். இருக்கட்டும், நீ கவலைப்பட வேண்டாம். பொழுது விடிவதற்குள் இந்தக் கற்பகவல்லியம்மாள் இந்தப் பங்களாவை விட்டு ஓடிப் போகும்படி நான் செய்கிறேன். அப்படி நான் செய்தால், உன்னுடைய தமயனாரை நாளைக்காகவது நான் பார்க்க முடியும்படி நீ செய்வாயா?'' என்றாள்.

புஷ்பாவதி, ''அம்மா! நீ ஏதாவது ஒன்று செய்யப்போக, நாங்கள்தான் உன்னைத் தூண்டிவிட்டோம் என்ற பழி எங்களுக்கு வந்து சேரும். நீ எதைச் செய்வதானாலும், நன்றாக யோசித்து எங்களுக்கு அபவாதம் உண்டாகாதபடி செய்; கற்பக

வல்லியம்மாள் நாளைக்குள் இந்தப் பங்களாவை விட்டுப் போய் விட்டால், நாளைய தினம் ராத்திரி சரியாக 10 மணிக்கு என்னுடைய தமயனார் இதே அறைக்கு வந்து நாளைய ராத்திரி முழுதும் உன்னோடுகூட சந்தோஷமாக இருக்கும்படி நான் செய்கிறேன். இது நிச்சயம்'' என்று கூறினாள்.

அதைக்கேட்ட சௌந்தரவல்லியம்மாள் கரைகடைந்த களிப்பும் ஆநந்தமும் அடைந்தவளாய் அந்த ஏற்பாட்டிற்கு இணங்கி, தான் உடனே கற்பகவல்லியம்மாளைத் துரத்தி விடு கிறது என்றும், புஷ்பாவதி மறுநாள் இரவு பத்து மணிக்கு சுந்தர மூர்த்தி முதலியாரை அங்கே வரச்செய்கிறது என்றும் அவர்கள் இருவரும் தீர்மானித்து ஒருவருக்கொருவர் கையடித்து உறுதி செய்துகொண்ட பின்னர், புஷ்பாவதி, வெளிப்பட்டு ஓசை செய்யாமல் நடந்து தனது படுக்கையறைக்குச் சென்றாள்.

தனியாக விடப்பட்ட சௌந்தரவல்லி அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டு முறுக்காக நடந்து கற்பகவல்லியம்மாள் படுத்திருந்த அந்தப்புரத்திற்குள் நுழைந்து, பக்கத்தில் இருந்த ஒரு கண்ணாடி விளக்கை கையில் எடுத்துக் கொண்டுபோய், கற்பகவல்லியம்மாள் படுத்திருந்த கட்டிலண்டை நெருங்கி நின்று விளக்கை அந்த அம்மாளது முகத்திற்கு அருகில் பிடிக்க, அதன் வெளிச்சம் பளிச்சென்று அவளது முகத்தில் தாக்கியது. அரை நித்திரையில் உணர்வு கலங்கிப் படுத்திருந்த கற்பக வல்லியம்மாள் திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்து கண்களைத் துடைத்துக்கொண்டு, வந்திருப்பது யார் என்று பார்க்க முயன் றாள்; விளக்கு நிரம்பவும் சமீபத்தில் இருந்தது. ஆகையால், நன்றாகப் பார்க்கமாட்டாமல், கண் கூசியது. சிறிது நேரம் சிரமப்பட்டு அவள் தனது கண்களை மெதுவாகத் திறந்து பார்த் தாள். சௌந்தரவல்லி கற்பகவல்லியம்மாளிடத்தில் அதுவரையில் நெருங்கிப் பேசியதில்லை ஆகையாலும், கோகிலாம்பாள் சிறிது நேரத்திற்குமுன் தனிமையில் வந்து ஆகாரம் கொடுத்து உபசரித்துவிட்டுப் போனாள் ஆகையாலும், கோகிலாம்பாளது நினைவே கற்பகவல்லியம்மாளுக்கு உண்டாயிற்று. இரண்டு மடந்தையரும் ஒரே அச்சில் வார்த்தெடுக்கப்பட்டவர்கள் போலக் கொஞ்சமும் பேதமின்றி இருந்தமையாலும், கற்பக

ளையடிக்கிற திருட்டுக் கழுதை! மகா யோக்கிய ஸ்திரீபோல, இந்தப் பங்களாவில் எல்லோருக்கும் சரி சமானமாக வந்து உட்கார்ந்துகொண்டு, எல்லோருக்கும் தலைகுனிவையும் அவமானத்தையும் உண்டாக்கி வைக்கிறாய்! இப்படிச் செய்த உன்னுடைய தலையைச் சிரைத்து, சாணியைக் கரைத்து ஊற்றி, துடைப்பக்கட்டைப் பிரயோகம் செய்து, கழுதை மேல் ஏற்றி வைத்து மேளம் பாண்டு வானவேடிக்கைகளோடு ஊர்வலமாகக் கொண்டுபோய், உன்னை உயிரோடு சுடுகாட்டில் வைத்துக் கொளுத்த வேண்டும். அப்படிச் செய்யாமல், வெறும் வார்த்தையாக உன்னோடு பேசினால், அது மரியாதையாகாது தான். நீ சொல்வது சரியான பேச்சு. எங்களுடைய பங்களாவில் குப்பைக்காரி வேலைசெய்யும் யோக்கியதைகூட உனக்கு இல்லை. அப்படிப்பட்ட பெரிய மனுஷியான உன்னோடு பேசு வதற்குக்கூட எனக்கு இஷ்டமில்லை. ஆகையால் நான் ஒரே ஒரு வார்த்தை உனக்குக் கண்டிப்பாகச் சொல்லுகிறேன். நாளைக்குப் பொழுது விடிவதற்குள் நீ இந்தப் பங்களாவைவிட்டு வெளியில் போய்விட வேண்டியது. பொழுது விடிந்தபிறகும் நீ இங்கே இருப்பாயானால், நான் மேலே சொன்ன மரியாதைகளெல்லாம் உனக்குக் கட்டாயம் நடந்தே தீரும். நான் ஏதோ விளையாட் டுக்காகச் சொல்லுகிறேன் என்று நினைத்து நீ அசட்டையாக இருந்தால், அதனால் வருவதை நீ அநுபவிப்பது தவறாது. தெரிகிறதா? ஜாக்கிரதை" என்று முறுக்காகவும் கடுகடுப்பாகவும் கண்டிப்பாகவும் கூறிவிட்டு அவளைப் பார்த்துப் பயங்கரமாக ஒரு விழி விழித்து நறநறவென்று பல்லைக் கடித்துவிட்டு, ஒரே விரைப்பாக நிமிர்ந்து நின்றபடியே நடந்து அந்த அந்தப்புரத்தை விட்டு வெளியில் போய்விட்டாள்.

★ ★ ★

அந்த இரவு கழிய, மறுநாட் காலை நேரம் வந்து சேர்ந்தது. இரவு முழுதும் இமைகளை மூடாமல் படுக்கையில் தத்தளித்துத் துவண்டு கிடந்த மடவன்னமான கோகிலாம்பாள் அதிகாலை யில் எழுந்து தனது காலைக் கடன்களை முடித்துக்கொண்டு தனது தாய் சயனித்திருந்த இடத்திற்குப் போக அந்த அம்மாளும் எழுந்து கொண்டிருக்க, அவளையும் அழைத்துக்கொண்டு,

கற்பகவல்லியம்மாளைப் பார்க்கும் பொருட்டு, முதல்நாள் அவளைப் படுக்க வைத்திருந்த அந்தப்புரத்திற்குள் நுழைந்து பார்க்கக் கட்டில் வெற்றுக் கட்டிலாக இருந்தது. கற்பகவல்லி யம்மாள் அந்த விடுதிக்குள் காணப்படவில்லை. ஒருகால் தனது காலைக் கடன்களை முடித்துக் கொள்ளும்பொருட்டு, அந்த அம்மாள் வெளியில் போயிருக்கலாம் என்று சந்தேகித்தவர் களாய் அவர்கள் இருவரும் அவ்விடத்திலேயே இருந்து அவளது வருகையை எதிர்பார்க்க நினைத்து, ஆசனங்களில் உட்கார்ந்து கொண்டனர். பூஞ்சோலையம்மாள் அந்த இடத்தில் ஒரு மேஜைக்கு அருகில் போடப்பட்டிருந்த நாற்காலியிலேயேதான் எப்போதும் உட்காருவது வழக்கம். அந்த மேஜையில் காகிதம், மை, இறகு முதலிய எழுது கருவிகளும், புஸ்தகங்களும் நிறைந் திருந்தன. அந்த நாற்காலியிலேயே பூஞ்சோலையம்மாள் தனது வழக்கப்படி உட்கார்ந்து தற்செயலாக மேஜை பக்கம் திரும்பிப் பார்க்க, அதன் மேல் ஒரு கடிதம் எழுதி மடித்து வைக்கப்பட் டிருந்தது தென்பட்டது. அது முதல் நாளிரவில் அவ்விடத்தில் இல்லாமல் புதிதாக இருந்தமையால், அது யாருக்கு யாரால் எழுதப்பட்டது என்ற விவரங்களை அறிய ஆவல் கொண்ட வளாய்ப் பூஞ்சோலையம்மாள் தனது கவனத்தைச் செலுத்தி அந்தக் கடிதத்தில் எழுதப்பட்டிருந்த மேல் விலாசத்தைப் படிக்கலானாள்.

ம—ஹா—மஹா—ஸ்ரீ, பூஞ்சோலையம்மாள் அவர்கள் சமூகத் துக்கு என்ற எழுத்துக்கள் மேல்விலாசத்தில் காணப்பட்டன.

அதைக்கண்டு மிகுந்த கலக்கமும், வியப்பும் அடைந்த பூஞ்சோலையம்மாள், "இந்தக் கடிதம் ஏது?" என்று கூறிய வண் ணம் ஆவலாக அதை எடுத்துப் பார்க்கத் தொடங்கினாள். அது அடியில் வருமாறு எழுதப்பட்டிருந்தது:—

கனம் தங்கிய பூஞ்சோலையம்மாள் அவர்களுக்கு, கற்பக வல்லியம்மாள் வணக்கமாக எழுதிக்கொள்வது:— இன்றைய தினம் காலையில் என் மகனாலும், அதன்பிறகு என்னாலும் தங்க ளுக்கும் தங்களுடைய குழந்தைகளுக்கும் நேர்ந்த துயரமும் அவமானமும் அளவில் அடங்கக்கூடியவை அல்ல. அப்படி இருந்தும், எங்களிடத்தில் கொண்ட கரைகடந்த வாத்சல்யத்தி

னாலும், மதிப்பினாலும் தாங்களும், தங்களுடைய மூத்த குழந்தையான விலையில்லா மாணிக்கமும் அவைகளைப் பாராட்டாமல், கடைசிவரையில் எங்களை மரியாதையாக நடத்தியதன்றி, என் மகனை விடுவிடுப்பதற்குத் தேவையான பிரயத்தனங்களை எல்லாம் செய்து, பையன் திரும்பி வந்தவுடன் இந்தக் கலியாணத்தையும் முடிப்பதாக உறுதிசொல்வதைக் கேட்டு நான் மட்டற்ற ஆநந்தம் அடைந்தேன். ஆனால் தங்களுக்கு இன்னொரு பெண் குழந்தை இருக்கிறது. இவ்வளவு தூரம் பங்கப்பட்டவர்களான எங்களைத் தாங்கள் சேர்த்துக் கொண்டிருப்பதனால், சௌந்தரவல்லியம்மாளின் கலியாணத்துக்கு இடையூறு நேரும் என்பது நிச்சயம். அதுவும் தவிர, அந்தத் துருக்கனால் எனக்கு நேரிட்ட அவமானத்தை என் மகன் கேள்வியுறுவானானால், அவன் உடனே தன்னுடைய உயிரை மாய்த்துக் கொள்வது நிச்சயம்; அதோடு, இவ்வளவு பெருத்த அவமானம் நேர்ந்த பிறகு, உயிர் வைத்துக் கொண்டு மற்ற மனிதருடைய முகத்தில் விழிப்பதற்கு எனக்கே அவமானமாக இருக்கிறது. ஆகையால், இத்தனை துன்பங்களுக்கும் மருந்தாக, நான் என்னுடைய உயிரையே விட்டுவிடத் தீர்மானித்து இன்றைய இரவு 11 மணிக்கு இவ்விடத்தை விட்டுப் புறப்பட்டு விட்டேன். எவரும் என்னுடைய பிணத்தையும் கண்டுபிடிக்க முடியாதபடி நான் இந்த ராத்திரிக்குள் சமுத்திரத்தில் விழுந்து உயிரை விட்டுவிடுவது நிச்சயம். நீங்கள் என்னை அநாவசியமாக எவ்விடத்திலும் போய்த் தேடி வீண் பிரயாசைப்பட வேண்டாம். நீங்கள் எங்கள் விஷயத்தில் செய்த உபசரணைகளையும், காட்டிய அன்பையும் நான் எத்தனை ஜென்மம் எடுத்தாலும் மறக்க மாட்டேன். மாசில்லாத மணியான சௌபாக்கியவதி கோகிலாம்பாளை நான் இந்த ஜென்மத்தில் மருமகளாக அடையும் பாக்கியத்தை அநுபவிக்கா விட்டாலும் அடுத்த ஜென்மத்திலாவது அதற்கு ஈசன் அருள் உண்டாக வேண்டும் என்ற ஒரே ஒரு பிரார்த்தனையோடு நான் இறக்கப் போகிறேன். அதற்கு ஈசன் அருள் உண்டாகும் என்று பூரணமாக நம்பி இருக்கிறேன்.

எனக்குக் கடைசி உதவியாக நான் தங்களிடத்தில் ஒரு மனுச் செய்து கொள்ளுகிறேன். நாளைய தினம் இந்தக் கடி

*தத்தை யாரிடத்திலாவது கொடுத்து, என் மகனுக்கு அனுப்பி வைக்க வேண்டும். அது சாத்தியப்படா விட்டால், இந்தக் கடிதத்தின் விஷயமாவது அவனுக்கு எட்டும்படிச் செய்ய வேண்டும். இதுதான் என்னுடைய கடைசி வேண்டுகோள்.*

*தங்களுக்கும், தங்களுடைய குழந்தைகளுக்கும் ஈசன் அருளால் தீர்க்காயுசும், சர்வாபீஷ்டமும் பரிபூரணமாக ஏற்பட வேண்டும்.*

*இங்ஙனம், தங்களை என்றும் மறவாத*
***கற்பகவல்லியம்மாள்***

என்று எழுதப்பட்டிருந்த கடிதத்தைப் பூஞ்சோலையம்மாள் படிக்கும்போதே கோகிலாம்பாளது கண்களிலிருந்து கண்ணீர் மாலை மாலையாகப் பொங்கி வழிந்தது. அடிக்கடி அழுகையும், துக்கமும் நெஞ்சையடைத்துக் கிளம்பின. அவர்கள் இருவரது தேகங்களும் பதறின. இருவரும் ஒருவரோடொருவர் என்ன பேசுவது என்பதை அறியாமல் கதிகலங்கி அளவு கடந்த துயரமடைந்து தீயிலிட்ட வெண்ணெய்போல இளகி உருகி ஓய்ந்திருந்தனர்.

அந்தச் சமயத்தில் ஒரு வேலைக்காரி, "அம்மா அம்மா" என்று வாசலிலிருந்து கூப்பிட்ட குரலைக் கேட்டு திடுக்கிட்ட பூஞ்சோலையம்மாள், "யாரது? வா இப்படி" என்று மறுமொழி கூற, உடனே வேலைக்காரி உள்ளே வந்து, "எஜமானே! வாசலில் யாரோ ஒரு மனிதன் வந்திருக்கிறான். அவன் இந்தக் கடிதத்தை மூத்த குழந்தையிடத்தில் கொடுக்கச் சொன்னான்" என்று கூறிய வண்ணம் ஒரு கடிதத்தை நீட்டினாள்.

அது கற்பகவல்லியம்மாள் எழுதப்பட்டதாக இருக்குமோ என்றும், அந்த அம்மாள் ஒரு கால் தனது தீர்மானத்தை மாற்றிக் கொண்டு எங்கேயாவது உயிரோடு இருக்கக் கூடாதா என்றும் அவர்களது மனம் உடனே நினைத்தது. பூஞ்சோலையம்மாள் அந்த வேலைக்காரியை வெளியில் போயிருக்கும்படி அனுப்பி விட்டு, அந்தக் கடிதத்தின் மேல் விலாசத்தைப் பார்த்து, "குழந்தாய்! இது உனக்கல்லவா எழுதப்பட்டிருக்கிறது! நீயே பிரித்துப் படி" என்று கூறியவண்ணம் கோகிலாம்பாளிடத்தில் கொடுக்க,

அந்த மடமயிலாள் அதை வாங்கிப் பிரித்து வாய்க்குள்ளாகவே படிக்கலானாள். அந்த ஒரு நிமிஷமும், அவர்களது மனதிற்கு ஒரு யுகமாகத் தோன்றியது. கோகிலாம்பாள் கட்டிலடங்காத தனது ஆவலில், வெகு சீக்கிரமாக அந்தக் கடிதத்தைப் படித்துவிட்டு, அதைத் தனது தாயிடம் நீட்டி, "இதை நீங்களும் படிக்கலாம். இதில் வித்தியாசம் ஒன்றுமில்லை" என்று கூற, உடனே பூஞ் சோலையம்மாள் ஆவலோடு அதை வாங்கிப் படிக்கலானாள்.

அவ்வாறு படித்த பிறகு அவர்கள் இருவரும் சிறிது நேரம் மௌனமாகவே இருந்து ஏதோ சிந்தனை செய்தனர். உடனே பூஞ்சோலையம்மாள், "குழந்தாய்! இதற்கு என்ன யோசனை சொல்லுகிறாய்?" என்று கேட்க, கோகிலாம்பாள் நிரம்பவும் பணிவாகவும், பரிதாபகரமாகவும் பேசத் தொடங்கி, "சரி; நம்முடைய பெட்டி வண்டியைத் தயார் படுத்தச் சொல்லுங்கள். நான் போய்விட்டு சீக்கிரமாக வந்து விடுகிறேன். அப்படியே அவருடைய தாயின் கடிதத்தையும் கொடுத்து விட்டு வருகிறேன்" என்றாள்.

அதைக்கேட்ட பூஞ்சோலையம்மாள், "கண்ணு! நீ போய் வக்கீல் அமர்த்தும் விஷயமாகவும், இந்தக் கேசை நடத்தும் விஷயமாகவும் அவர் சொல்வதையெல்லாம் கேட்டுக்கொண்டு இதைப்பற்றி பயப்படாமல் தைரியமாக இருக்கும்படி சொல்லி விட்டு வந்து விடு; இந்தக் கடிதத்தை இப்போது கொடுப்பது பிசகு; ஏற்கனவே விசனத்தில் ஆழ்ந்திருக்கும் மனிதர் இதைப் பார்த்தால், ஒரு வேளை தம்முடைய உயிருக்கே ஹானி தேடிக் கொண்டாலும் கொள்வார். அவர் விடுபட்டு வந்த பிறகு நாம் இதைக் காட்டுவோம். அதற்குள் நாம் ஆள்களை விட்டு அந்த அம்மாளைத் தேடிப்பார்க்கச் சொல்வோம். ஒரு வேளை தெய்வச் செயலாக அந்த அம்மாள் உயிரோடு இருந்தால், அது அநுகூலமாகிவிடும். அவரையும் நாம் அநாவசியமான துயரத்தில் ஆழ்த்தவில்லை என்றாவது இருக்குமல்லவா?" என்றாள்.

அது சரியான யோசனை என்று கோகிலாம்பாள் ஒப்புக் கொள்ள, உடனே பூஞ்சோலையம்மாள் கற்பகவல்லியம்மாளது கடிதத்தை ஒரு பெட்டிக்குள் வைத்து பூட்டிவிட்டு, அவ்வி டத்தை விட்டு வெளியிற்போய்த் தனது ஆட்களை எல்லாம்

அழைத்து கடற்கரையிலும் மற்ற இடங்களிலும் போய் கற்பக வல்லியம்மாளைத் தேடும்படி அனுப்பிவிட்டு, ஒரு பெட்டி வண்டிக்குக் குதிரையைப் பூட்டச் செய்து, ஆயத்தமாக வைத்து விட்டு உள்ளே வர, அதற்குள் கோகிலாம்பாள், தன்னை நன்றாக அலங்கரித்துக் கொண்டு, கண்ணபிரானுக்குக் கொடுப்பதற்காக ஏராளமான பழ வகைகளையும், பக்ஷண பலகாரங்களையும் எடுத்துப் பெருத்த மூட்டையாகக் கட்டி வைத்துக்கொண்டு புறப்பட்டு வெளியில் வந்து, வண்டிக்குள் ஏறிக்கொண்டாள். தின்பண்ட மூட்டையும் உள்ளே வைக்கப்பட்டன. கண்ண பிரானிடத்திலிருந்து கடிதம் கொண்டு வந்த கோவிந்தசாமியும், வண்டிக்காரன் ஒருவரும் முன் பக்கத்தில் உட்கார்ந்து கொள்ள, வண்டி புறப்பட்டது. வண்டியின் கதவுகள் ஜன்னல்கள் முதலியவை நன்றாக மூடப்பட்டு இருந்தமையால், உட்புறத்தில் யார் இருக்கிறார்கள் என்பது வெளியில் தெரியாதிருந்தது; ஆனால் கோகிலாம்பாள் மாத்திரம் இடுக்குகளால் வெளியில் பார்த்துக்கொண்டே சென்றாள்.

புரசைப்பாக்கத்திலிருந்து புறப்பட்ட வண்டி, டிராம் வண்டிப் பாதையின் வழியாகவே சென்று ஆனைக்கவுனி யண்டை போயிற்று.

அப்போது அவ்விடத்தில் ஆயத்தமாக நின்ற போலீஸ் ஜெவான் ஒருவன் பெருத்த கூக்குரல் செய்து கொண்டு முன்னால் ஓடிவந்து வழிமறித்துக் குதிரையின் முகத்து வாயைப் பிடித்துக் கொண்டு வண்டிக்காரனை தாறுமாறாக வைது, "வண்டியை இடது பக்கமாக ஓட்டாமல் ஏன் வலது பக்கமாக ஓட்டினாய்? ஓட்டு வண்டியை ஸ்டேஷனுக்கு. இந்த வண்டியை சார்ஜ் செய்திருக்கிறேன்" என்று கூறிப் பிடித்து இழுக்க, உடனே கோவிந்தசாமி அவனைப் பார்த்துக் கெஞ்சி, "ஐயா! ஐயா! என்னவோ தெரியாமல் ஓட்டி விட்டான். கிடக்கிறது விட்டு விடு; உனக்கு ஏதாவது நாஸ்தா செலவுக்குக் கொடுக்கச் சொல்கிறேன். உள்ளே பெரிய மனிதர் வீட்டுப் பெண்பிள்ளை இருக்கிறார்கள். அவர்கள் அவசரமாக ஓர் இடத்துக்குப் போக வேண்டும். ஒரு நிமிஷம் வண்டி இங்கே நின்றாலும், நாங்கள் போகும் காரியம் கெட்டுப் போகும்;

போகும் வேலை ஆகாது; உபயோகமில்லாமல் திரும்பும்படியாக இருக்கும். விடப்பா, உனக்குப் புண்ணியமாய்ப் போகட்டும்'' என்று கூறி நயந்து மன்றாடினான். அந்த ஜவான், ''உள்ளே இருக்கிறது யார் வீட்டு மனிதரப்பா?'' என்றான். கோவிந்தசாமி, ''துபாஷ் ராஜரத்தின முதலியார் வீட்டு அம்மாள்'' என்றான்.

அதைக்கேட்ட ஜெவான், ''அப்படியானால் இந்த வண்டியை ஓட்டிக்கொண்டு போய்க்கொண்டே இரு; நான் இந்த வண்டிக்காரனை இதோ பக்கத்தில் இருக்கும் ஸ்டே ஷனுக்கு அழைத்துக்கொண்டு போய் இவனுடைய பெயரைப் பதிந்து கொண்டு பின்னால் அனுப்புகிறேன். யாராக இருந் தாலும் நான் விடக்கூடாது; இந்த ஸ்டேஷனுக்கு வந்திருக்கிற சப் இன்ஸ்பெக்டர் ஒரு சிடுமூஞ்சி நாய். இதை நான் சும்மா விட்டால் அவன் என்னைத் தொலைத்து விடுவான்'' என்றான்.

அதைக்கேட்ட கோவிந்தசாமி தனது பக்கத்தில் இருந்த வண்டிக்காரனைப் பார்த்து, ''ஆமப்பா; அதுதான் நல்ல யோசனை; நீ இறங்கிப் போய் பெயரைப் பதிய வைத்து விட்டு வா; நான் ஓட்டிக்கொண்டு மெல்லப் போகிறேன். உனக்கு கொஞ்சம் நேரமானாலும், நீ தங்கசாலைத் தெரு 2075-ம் நம்பர் வீட்டுக்கு வந்து சேர். அங்கேதான் நாங்கள் போகிறோம்'' என்று நயமாகக் கூற, உடனே அந்த வண்டிக்காரன் கீழே இறங்கினான். ஜெவான் அவனை அழைத்துக்கொண்டு பக்கத்தில் இருந்த ஸ்டேஷனுக்குள் போய்விட்டான். கோவிந்தசாமி பெட்டி வண்டியை ஓட்டிக்கொண்டு, அந்தப் பாட்டையின் வழியாகப் போய், தங்கசாலைத்தெருவை அடைந்து, அந்தத் தெருவோடு நெடுந்தூரம்போய், அதற்கு அப்பால் இருந்த வேறொரு மறைவான தெருவிற்குள் நுழைந்து அங்கே காணப்பட்ட ஒரு பெருத்த மாளிகையின் வாசலில் வண்டியைக் கொண்டுபோய் நிறுத்தினான்.

அந்த மாளிகை ஒரு பங்களாவைப்போல, நாற்புறங்களிலும் மதிலினால் சூழப்பட்டதாகவும், உட்புறத்தில் பூங்காவனம் உடையதாகவும் இருந்தது. அதன் வாசலில் இரண்டு போலீஸ் காரர்கள் பாராக் கொடுத்துக் கொண்டு வந்தனர். கோவிந்தசாமி வண்டியை விட்டுக் கிழே இறங்கி பக்கத்தில் வந்து கதவைத்

திறந்து விட்டு வணக்கமாக ஒதுங்கி நின்று, "அம்மா இதுதான் போலீஸ் ஸ்டேஷன்; இறங்குங்கள். பலகார மூட்டையை நான் எடுத்துக் கொண்டு வருகிறேன். நானும் முதலியார் ஜாதிதான்" என்றான்.

அதைக்கேட்ட கோகிலாம்பாள், வாசலில் இரண்டு ஜெவான்கள் நின்றதைக் கண்டு அது போலீஸ் ஸ்டேஷன் என்று நம்பி வண்டியை விட்டு கீழே இறங்கினாள். கோவிந்தசாமி தின் பண்ட மூட்டையை எடுத்துக்கொண்டு, "வாருங்கள்" என்று கூறி அந்த வடிவழகியையும் அழைத்துக் கொண்டு உள்ளே சென்றான்.

கோகிலாம்பாள் கற்பகவல்லியம்மாள் இறந்து போயி ருப்பாளோ என்ற கவலையிலேயே தனது முழு கவனத்தையும் செலுத்தி உலகத்தையே மறந்தபடி நடந்தாள். ஆதலால், உள்ளே இருந்த வஸ்துக்களையாவது, எந்தெந்த இடத்தின் வழியாகப் போனார்கள் என்பதையாவது உணராமல் இருக்க அவளது தேகம் மாத்திரம் தானாகவே சென்றது. கோவிந்தசாமி அவளை மேன்மாடப் படிகளின் வழியாக முதலாவது உப்பரிகைக்கு அழைத்துப்போய் அங்கே இருந்து ஏறிய படிகளின் வழியாக இரண்டாவது உப்பரிகைக்கு நடத்தி அதற்குள் நுழைந்தான். அந்த இடத்தில் பல அழகிய அறைகளும், கூடங்களும் இருந்தன. அவைகளிற்கெல்லாம் நடு மத்தியிலிருந்த ஓர் அறையைக் காட்டி "அதற்குள் முதலியார் இருக்கிறார். உள்ளே போய்ப் பேசுங்கள். இந்த மூட்டையையும் இனி நீங்களே எடுத்துக் கொண்டு போங்கள்" என்று கூறிய வண்ணம் சிற்றுண்டி மூட்டையை மரியாதையாகக் கீழே வைக்க, அதை எடுத்துக் கொண்ட அந்தப் பெண்பேதை, தனது ஆருயிர் மணவாளனைக் காண வேண்டும் என்னும் ஆவலில், எவ்விதச் சந்தேகமும் கொள்ளாதவளாய் அந்த அறைக்குள் நுழைய, அதற்கு அப்பால் ஒரு வாசலும், ஒரு அறையும் இருந்தன. கோகிலாம்பாள் முதல் அறையைக் கடந்து அடுத்த அறைக்குள் நுழைந்தவுடனே கோவிந்தசாமி முதல் அறை யின் கதவை மெதுவாக மூடி வெளியில் தாளிட்டு விட்டான்.

நமது பெண்மணியான கோகிலாம்பாள் இரண்டாவது அறைக்குள் நுழைய, அது சிறைச்சாலைப்போலக் காணப்படா

மல் மகா அற்புதமாகச் சிங்காரிக்கப்பட்டிருந்த ஒரு சோபன அறை போலக் காணப்பட்டது. அவ்விடத்தில் ரோஜா, ஜாதி மல்லிகை முதலியவை கூடை கூடையாகப் பரப்பப்பட்டிருந்த ஒரு சொகுசான வில் கட்டிலின் மேல் உட்கார்ந்திருந்த போலீஸ் இன்ஸ்பெக்டர் பராங்குசம் பிள்ளை கோகிலாம்பாளைக் கண்ட வுடனே கட்டுக்கடங்கா மோகாவேசங் கொண்டு கட்டிலை விட்டு இறங்கி, "அடி வாடீ! என் கண்ணாட்டி! உனக்காக நான் எவ்வளவு நாழிகையாகக் காத்திருக்கிறேன். என் தங்கமே! வா இந்தக் கட்டிலுக்கு" என்று கூறிய வண்ணம் புன்னகை செய்த முகத்தோடு ஓடி வந்து, கோகிலாம்பாளை ஆசையோடு கட்டித்தூக்க முயன்றார்.

*[முதல் பாகம் நிறைந்தது]*

*8—வது அதிகாரம்*

# மதி காணா இரவோ!
# மழை காணா இளம்பயிரோ!




கிலாம்பாள் என்ற நமது ஏந்தெழில் மடவன்னம் அமர்ந்து சென்ற பெட்டி வண்டியின் சாரதியும் போலீஸ் ஜெவானும் ஆனைகவுனி போலீஸ் ஸ்டேஷன் சப் இன்ஸ்பெக்டரிடம் போய் ஆஜராயினர். அவர் ஜெவானை நோக்கி கம்பீரமாக நிமிர்ந்து பார்த்து, "யார் இவன்? என்ன விசேஷம்?" என்று கேட்க, ஜெவான், "எஜமானே! இவன் புரசைப்பாக்கம் துபாஷ் ராஜரத்ன முதலியாருடைய வண்டிக்காரன். அவருடைய வீட்டு ஜனங்களைப் பெட்டி வண்டியில் வைத்து ஓட்டிக்கொண்டு வந்த இவன் இடது பக்கமாக வராமல் வலது பக்கமாக வந்தான். அதற்காக இவனை சார்ஜ் செய்து அழைத்துக்கொண்டு வந்தேன்" என்று பணிவாகவும் மரியாதையாகவும் கூறினான்.

உடனே சப் இன்ஸ்பெக்டர், "வண்டி எங்கே?" என்றார். ஜெவான், "எஜமானே! வண்டியில் இருந்த அம்மாள் எங்கேயோ நிரம்பவும் அவசரமாய்ப் போகவேண்டுமாம். அதனால் அவர்கள் இவனை அனுப்பிவிட்டு, வண்டியை ஓட்டிக்கொண்டு போய் விட்டார்கள். நான் வண்டியின் நம்பரைக் குறித்துக் கொண்டு வந்தேன்" என்றான்.

சப் இன்ஸ்பெக்டர் வண்டிக்காரனை நோக்கி, "ஏனடா! அடேய்! வண்டியை நீ வலது பக்கமாக ஏன் ஓட்டினாய்?"

என்றார். வண்டிக்காரன் சப் இன்ஸ்பெக்டரை நோக்கி வணக்கமாகக் கும்பிட்ட வண்ணம் பணிவாய்ப் பேசத் தொடங்கி, "இல்லீங்க சாமி! நானு சரியாத்தான் ஒட்டிக்கினு வந்தேனுங்க. குருதெ புச்சுங்க; அது என்னாத்தையோ கண்டு மெரண்டு இஸுத்துதுங்க. அப்ப, எதிருலே ரெண்டு மூணுவண்டி சேர்ந்தாப்பலே வந்துடுச்சுங்க; அதுங்களேக் கண்டு குருதெ ரவையூண்டு வடக்காலே நவந்து பூட்டுதுங்க. அம்படத்தானுங்க. நானு ஒணும்னு வலது பக்கமாகவே ஒட்டிக்கினு வரல்லீங்க" என்றான்.

சப் இன்ஸ்பெக்டர், "அதைப்பற்றி நமக்கு அக்கறை இல்லை. வண்டிக்காரனே வேண்டுமென்று வலது பக்கமாக ஒட்டுகிறானா, அல்லது, அவனை மீறி குதிரையே வலது பக்கமாக இழுத்துக் கொண்டு போகிறதா என்பதை நாங்கள் கண்டுபிடிக்கிறது சாத்தியமான காரியமல்ல. எந்த வகையிலும் வண்டி வலதுபக்கம் வந்தால், அதுவே போதுமானது. ஆகையால், உன்மேல் குற்றம் ஏற்படுகிறது. உன் பெயரென்ன? உனக்கு ஜாமீன் கொடுக்க யாராவது வந்திருக்கிறார்களா?" என்றார்.

வண்டிக்காரன், "எம்பேரு முருகேஸனுங்க. எனக்கு சாமீனு குடுக்க சானாபேரு இருக்காங்க. எங்க எசமானரு வங்களாவுக்கு வந்தீங்கன்னா, லெச்ச ரூவாய்க்கி ஒணுமானாலும் அவுங்களே சாமீனு குடுப்பாங்க. வாங்க போவலாம்" என்றான்.

அதைக் கேட்ட சப் இன்ஸ்பெக்டர் புரளியாக நகைத்து, "ஓகோ! நாங்கள் உன்னோடு அவர்களுடைய பங்களாவுக்கு வர வேண்டுமோ! எங்களுக்கு இங்கே வேறே வேலை இல்லை யென்று நினைத்துக் கொண்டாயா? அடேய் முருகேஸ்! நாங்கள் யாரும் உன்னோடு வரமுடியாது. யாராவது இங்கே வந்து ஜாமீன் கொடுத்தால், உன்னை விடுகிறோம். இல்லா விட்டால், நீ இங்கேயே லாக்காப்பில் இருக்கவேண்டும்" என்றார்.

முருகேசன், "எசமானே! நீங்க வரமுடியாதுன்னா என்னெயாச்சம் வெளியே உடுங்க. நாம் போயி மனிசரெ இட்டாறேனுங்க" என்று பணிவாகக் கூறினான்.

சப் இன்ஸ்பெக்டர் மறுபடியும் புரளியாக நகைத்து, "உன்னை வெளியில் அனுப்பிவிட்டால், அதன் பிறகு ஜாமீன் எதற்காக? வெளியில் உன்னை விட்டால், நீ மறுபடி திரும்பி வரமாட்டாய் என்ற அவநம்பிக்கையினால்தானே நாங்கள் ஜாமீன் கேட்கிறோம். அதைத் தெரிந்து கொள்ளாமல் பேசுகிறாயே" என்றார்.

முருகேசன், "எங்கிளுக்கு என்னாசாமி தெரியும். நாங்க படிக்காத முட்டாளுங்கதானே. எங்கிளுக்கு எல்லாத்தியும் நீங்கதாஞ்சாமி சொல்லிக் குடுக்கணுங்க. ஏஞ்சாமி! நானு பயந்து ஒரு கேவி கேக்கறேனுங்க. எங்க மனிசருக்குத் தெரியாம என்னெ நீங்க நடுப்பாதையிலே புடிச்சிகினீங்க; என்னெயும் உடமாட்டேண்டுறீங்க. நீங்களும் இத்தெ வுட்டு வர மாட்டேண்டுறீங்க. எனக்கு வேண்டிய மனுசரு அவுங்கதான். அவுங்க ஊட்டுலே இருக்காங்களே. எனக்கு சாமீனு குடுக்கணுமின்னு அவுங்களுக்கு சோசியம் தெரியுமா சாமீ! அவுங்களே எப்படி வருவாங்க சாமீ!" என்றான்.

அதைக்கேட்ட சப் இன்ஸ்பெக்டர் கோபங்கொண்டு, "அடேய்! என்ன அதிகப் பிரசங்கித்தனமாய்ப் பேசுகிறாய்! நிறுத்து உன் குறும்பை. உன்னைச் சேர்ந்தவர்கள் அவர்களாக இந்தச் சங்கதியைத் தெரிந்துகொண்டு வந்து ஜாமீன் கொடுத்தால்தான், நாங்கள் உன்னை விடலாமேயன்றி, நாங்கள் ஜாமீனுக்காக உன்னோடு கூட வந்து அலையவும் முடியாது; எங்களுக்கெல்லாம் வேறே முக்கியமான வேலையிருப்பதால், நீ சொல்லும் இடத்திற்குப் போய் உனக்கு ஜாமீன் கொடுக்க மனிதரை அழைத்துவரவும் முடியாது. உன்னுடைய மனிதர்கள் உன்னைத்தேடி, நீ இங்கே இருப்பதாகத் தெரிந்துகொண்டு வந்து ஜாமீன் கொடுக்கிறவரையில் நீ லாக்கப்பில் இரு" என்று கூறினார்.

அதைக்கேட்ட வண்டிக்காரன் நிரம்பவும் பணிவாகப் பேசத் தொடங்கி, " எசமானே! நானு அப்பிடி நாடோடி சீடோடி இல்லீங்க தக்க பெரிய மனிசரு வூட்டுலே இருக்கறவனுங்க. வண்டி நம்பரே நீங்க தெரிஞ்சுக்கினீங்க.

குளங்கள் சத்திரம் கடைகள் முதலிய வசதிகள் காணப பட்டமையால், தாம் அந்த இரவை அவ்விடத்திலிருந்து கழிப்பதென்று நமது சாமியார் தீர்மானித்துக்கொண்டு அவ்வாறே அந்த ஊரில் தங்கினார். கோவில் சுவாமி தரிசனம், சத்திரத்தில் சாப்பாடு, திண்ணையில் படுக்கையாக அந்த இரவு கழிந்தது. அந்த ஊரும் இருப்பதற்கு வசதியானதாய் இருந்தது. ஆகையால், தாம் அவ்விடத்தில் இரண்டு தினங்கள் இருந்து பிறகு புறப்பட்டுப் போவதென்று சாமியார் தீர்மானித்துக் கொண்டார். ஆனால், அவ்விடத்தில் அவர் ஒரு நாளைக்கு அதிகமாய் இருக்க இயலாமல் போய்விட்டது. அந்த ஊரில் இருந்த சத்திரம் தர்ம சத்திரமாதலால், அவ்விடத்தில் ஏழைப் பிரயாணிகளுக்கும், பரதேசிகளுக்கும் இலவசமாய்ப் போஜனம் அளிக்கப்பட்டதுபற்றி, அந்தச் சத்திரத்தின் திண்ணையில் ஏராளமான பரதேசிகளும், பிச்சைக்காரர்களும் எப்போதும் நிரம்பி இருந்தனர். அவர்களுள் சிலர் தவிர மற்றவர் விகாரமான தோற்றமும், அசங்கியமான ஆடைகளும், கஞ்சாக் குடித்தல், பங்கியடித்தல், கள் குடித்தல் முதலிய துர்நடத்தைகளும், இழிவான சம்பாஷணையும் உடையவராய் இருந்தமையால், அவர்களுக்கிடையில் இருந்தது திவான் சாமியாருக்கு நிரம்பவும் துன்பகரமாக இருந்தது. ஆகையால், அவர் அவ்விடத்தை விட்டு மறுநாளே புறப்பட்டு வேறோர் ஊருக்குப் போய்ச் சேர்ந்தார். அவ்வாறு திவான் மூன்று மாதகாலம் நடந்து ஷேத்திரவாசம் தீர்த்த யாத்திரை முதலியவற்றைச் செய்தபடி ஒருநாள் தங்கிய இடத்தில் மறுநாள் தங்காமல் சென்று கொண்டே இருந்தார். அவ்வாறு தொடர்ச்சியாகக் கால் நடையாய் நடந்து சென்றமையாலும், ஒவ்வோர் ஊரில் ஒவ்வொரு விதமான ஆகாரமும் தண்ணீரும் கிடைத்தமையாலும், பஞ்சணையில் சயனித்த உடம்பைக் கரடுமுரடான திண்ணைகளில் போட்டுப் படுக்க நேர்ந்தமையாலும், எப்போதும் அவரது மனத்தில் குடிகொண்டு அதை ஓயாமல் புண்படுத்திக் கொண்டே இருந்த விசனமும் சஞ்சலமும் நிமிஷத்திற்கு நிமிஷம் பெருகிக் கொண்டே இருந்தமையாலும், தாம் உயிருக்குயிராய் நினைத்துக் காதலித்த காந்திமதியம்மாளையும் ராஜாபகதூரையும் நெடுங் காலமாய் விட்டுப்பிரிந்த ஏக்கத்தின் சுமையினாலும், காந்திமதி யம்மாளின்மீது ஏற்பட்ட சம்சயமாகிய பெரும்பேய் விலகாமல், அவரது மனத்தைக் கெட்டியாகப் பிடித்து ஆட்டிவைத்தமை

யாலும், திவான் வெகுசீக்கிரத்தில் இளைத்துக் கருத்துத் துரும்பாய் மெலிந்து முற்றிலும் உருமாறிப் போய்விட்டார். அவரது தேக நன்னிலைமையும் குலைந்து, இருமல் ஜுரம் முதலிய நோய்களுக்கு இருப்பிடமாயிற்று. மினுமினுப்பாக இருந்த அவரது முகம் வாடி வதங்கிக் காய்ந்துபோயிற்று. கன்னங்களின் எலும்புகள் வெளிப்படத் தொடங்கின. தாமே தமது வடிவத்தைக் கண்ணாடியில் பார்த்தால், தமது அடையாளத்தைக் கண்டுக்கொள்ளக் கூடாதபடி அவர் அடியோடு மாறிப்போனார். அவ்வாறு இளைத்து முற்றிலும் வேறுபட்டுப் போனதற்கு அநுகுணமாக அவர் முன்னரே தமது தலையை மொட்டையடித்து மீசையை எடுத்துவிட்டு, காஷாய அங்கி விபூதி, ருத்திராக்ஷ மாலைகள் முதலியவற்றை அணிந்து கொண்டிருந்தமையால், அவரது பழைய தோற்றம் அடியோடு மாறிப்போய் விட்டது. அவருடன் எப்போதும் இருந்து பழகிய காந்திமதியம்மாளோ, திருவனந்தபுரத்தில் அவரோடு நெருங்கிப் பழகிய இதர மனிதர்களோ, அவரை உற்று நோக்கினாலும், அவர் இன்னார் என்பதை அறிந்துகொள்வது முற்றிலும் துர்லப மாகப் போய்விட்டது. அத்தகைய நிலைமையை அடைந்த திவான் சறிதொடர் மங்கலத்தை விட்டுப் புறப்பட்டதற்குச் சுமார் மூன்று மாத காலத்திற்குப் பிறகு திருவிடமருதூருக்கு அருகில் போய்ச் சேர்ந்தார். இரண்டு மூன்று தினங்களில் தாம் தமது சொந்த ஊரை அடைந்துவிடுவோம் என்ற நினைவு தோன்றத் தோன்ற அவரது ஆவலும் வேதனைகளும் மலை போலப் பெருகி சகிக்கவொண்ணாத சஞ்சலத்தை உண்டு பண்ணின. தாம் எவ்விதமான விபரீதச் செய்தியைக் கேட்க நேருமோ என்ற எண்ணமும், தாம் இறந்து போனதாகக் கேள்வியுற்ற தமது தந்தை உயிருடன் இருக்கிறாரோ, அல்லது தமது செய்கையே அவருக்கு எமனாய் முடிந்துவிட்டதோ என்ற எண்ணமும், காந்திமதியம்மாள் தமது கள்ள நாயகனோடு பகிரங்கமாய் வாழ்வதைத் தாம் காண நேருமோ என்ற எண்ணமும், அல்லது அவள் குற்றமற்றவளாயிருந்தால், தான் வைதவ்வியம் அடைந்ததைச் சகியாமல் அவள் எவ்வித நிலைமை யில் இருக்கிறாளோ அல்லது கிணற்றில் குளத்தில் விழுந்து இறந்துவிட்டாளோ என்ற எண்ணமும் மாறிமாறி மும்முரமாக எழுந்து பெருகி அவரை ஓயாமல் கொன்று கொண்டே இருந்தன.

தொடர்ச்சி அடுத்த பாகத்தில்...

# ஆங்கிலத்தில் ஷெர்லாக்ஹோம்ஸ்
# நவீன காலத்தில் 007 ஜேம்ஸ்பாண்டு
# அன்றும் இன்றும் என்றும் தமிழகத்தில்

## திகம்பர சாமியார்

| | |
|---|---|
| 1. பூர்ண சந்திரோதயம் | பாகம் - 1 |
| 2. பூர்ண சந்திரோதயம் | பாகம் - 2 |
| 3. பூர்ண சந்திரோதயம் | பாகம் - 3 |
| 4. பூர்ண சந்திரோதயம் | பாகம் - 4 |
| 5. பூர்ண சந்திரோதயம் | பாகம் - 5 |
| 6. கும்பகோணம் வக்கீல் | பாகம் - 1 |
| 7. கும்பகோணம் வக்கீல் | பாகம் - 2 |
| 8. மாயா வினோதப் பரதேசி | பாகம் - 1 |
| 9. மாயா வினோதப் பரதேசி | பாகம் - 2 |
| 10. மாயா வினோதப் பரதேசி | பாகம் - 3 |
| 11. மேனகா | பாகம் - 1 |
| 12. மேனகா | பாகம் - 2 |
| 13. சௌந்திர கோகிலம் | பாகம் - 1 |
| 14. சௌந்திர கோகிலம் | பாகம் - 2 |
| 15. சௌந்திர கோகிலம் | பாகம் - 3 |
| 16. சௌந்திர கோகிலம் | பாகம் - 4 |
| 17. மதன கல்யாணி | பாகம் - 1 |
| 18. மதன கல்யாணி | பாகம் - 1 |
| 19. மதன கல்யாணி | பாகம் - 2 |
| 20. வித்யாசாகரம் | |
| 21. வசந்த மல்லிகா | |

... ... ... இதற்கு மேலும் வருவார் !